

உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு

| | | |
|---|---|---|
| துணர் ௰௩ | ஈசுவர ஆனி | மலர் ௩ |


உ

## திருவாசகத்தே "நமச்சிவாய வாஅழ்க" என்ற அகவல் பாவின் ஆய்வு

திருவாளர். வே. மு. ஸ்ரீநிவாஸ முதலியாரவர்கள், காஞ்சீபுரம்

(முற்றொடர்ச்சி துணர் 13. மலர் 2. பக்கம் 79.)

72. **கூர்த்த மெய் ஞானத்தால் கொண்டு உணர்வார் தம் கருத்தே!**— நுண்ணியதும், பொய் அற்றதும் ஆகிய அறிவைக் கொண்டு அறிவார் உடைய நினைவில் இருப்பவனே!

ஆல்—உருபு மயக்கம். தம்-சாரியை-கருத்து-ஆகுபெயர். ஏ-விளி உருபு *கருத்தின் என்றபாடம் இவ்வடியின் கீழ் "நோக்கரிய நோக்கே" என்ற இடைச்செருகல் அடிக்கு ஏற்பத்திரிக்கப்பட்டது போலும். கருத்தின் என்ற பாடம்—பொருள் இயைபு இன்மையால் பொருத்தம் அன்று. கருத்தே என்ற விளிப்பெயர் பாடமே பொருத்தமும் கவிக் கருத்தும் ஆகும்.

"நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுணுக்கே" என்ற இவ்வடி இவண் இடைச் செருகல் ஆம். எதுகைக்கு ஏற்பத் துணை அடி ஒன்று இன்றித் தனித்து நிற்றலானும், பொருள் இயைபு இன்மையானும், "நோக்கரிய, போக்கும், காக்கும்" என்ற ககர எதுகை அடிகள் மூன்றனுள்ளும் இந் "நோக்கரிய" என்ற அடியே இடைச் செருகல் எனக் கழித்தற் பாலதாம்.

73. **போக்கும் வரவும் புணர்வும் இலா புண்ணியனே!**—ஒரு காலத்தே கெடுதலும், ஒரு காலத்தே ஆதலும், சில காலத்தே இருத்தலும், சொல்லப்படுதல் இல்லாதது ஆகிய (என்றும் அழியாத) புண்ணியத்தை உடையானே!

இறைவன் இயல்பாகவே வினையின் நீங்கினவன் என்றபடி. "சென்று அடையாத திரு உடையான்" என்ற திருமொழியை இவண் நினைக்க. முன் அடி 39ல் குறிக்கப்பட்ட பொருள் மற்றும் இவண் வேண்டாவாம். அவ்வடியின் உரையைக்காண்க.

74. **காக்கும் எம் காவலனே! காண்பு அரிய பேர் ஒளியே!**—எம்மைக் காக்கும் காவலனாக இருப்பவனே! நின் திருவருளைப் பெறுதார், காணுதற்கு இயலாத பெரிய ஒளியாய் இருப்பவனே!

"எம் காக்கும் காவலனே" என மொழி மாற்றுக.

75. **ஆற்று இன்ப வெள்ளமே! அத்தா!**—முத்தியாகிய ஆற்றின்கண் இன்பம் ஆகிய வெள்ளம் போன்றவனே! யாவருக்கும் மூத்தவனே!

"இறைவன் இன்ப வடிவன்" என்றபடி. இன்ப வெள்ளம் என்றதனுக்கு ஏற்ப முத்தி ஆறு என உருவகம் செய்க. முன் அடி 63ன் உரையைக் காண்க. அத்தா என்றதற்கு அடிகள், புணர்ச்சிப்பத்தின் ஈற்றுப்பாவில் "கண்ணார் விசும்பின் விண்ணோர்க்கு எல்லாம் மூப்பாய்" என்றார்கள். அக்குறிப்பை நினைக்க.

**மிக்காய் நின்ற (76) தோற்றச்சுடர் ஒளியாய்!**—அரி அயர்கள் முன்னே நின் உருவின் அளவினை அவர்களால் அறியப்படா வண்ணம் பெரிய தழல் போலும் உருவாய் நின்ற ஒளியே!

*"மிக்குசுடர் தோற்றம் ஆய் நின்ற ஒளியாய்" என மொழி மாற்றுக. சுடர்—தழல்.*

76. **சொல்லாத நுண் உணர்வாய்!**—*இவ்வண்ணம், இவ்வுரு எனச் சுட்டிச் சொல்லுதற்கு இயலாத நுண்ணிய உணர்வு வடிவாய் இருப்பவனே!*

77. **மாற்றம் ஆம் வையகத்தின் வெவ்வேறே வந்து அறிவு ஆம் (78) தேற்றனே!**—*நின் திருவருளை நாடும் நெறியில் ஐயமும் திரிபும் உற்ற அடியார்கள் முன் வேறுவேறு வடிவன் ஆகிச் சென்று அவ்வவர்களுக்கு ஏற்ற நல்ல அறிவை ஆக்கும் தெள்ளியனே!*

*வையகம்—ஆகு பெயர். வந்து—சென்று.*

78. **தேற்றத் தெளிவே! என் சிந்தனையுள் (என் சிந்தனை உள் தேற்றத் தெளிவே.)**—*என் மனத்து அகத்தே தெளிவின் தெளிவாய் இருப்பவனே!*

79. **ஊற்று ஆன உண்ணூர் அமுதே! உடையானே!**—*ஆறு, கேணி முதலியவற்றின் ஊற்றில் தோன்றியவும், உண்ணுதற்குப்பொருந்தியவும் ஆகிய நீராய் இருப்பவனே! என்னை அடிமையாக உடையவனே!*

80. **வேற்று விகார விடக்கு உடம்பின் உள் கிடப்ப (81) ஆற்றேன்**—*காலம் கழியக் கழிய பல வேறுபாடுகள் தோன்றுதற்கு ஏது ஆன ஊன் நிறைந்த உடம்பின்கண் இருத்தற்கு வலிமை இல்லாதவன் ஆயினேன். ஆதலால்,*

81. **எம் ஐயா அரனே ஓம் என்று என்று (ஓம் எம் ஐயா! அரனே என்று என்று)**—*ஓம் எம் ஐயா! என்றும், ஓம் அரனே! என்றும்,*

*இறைவனின் திருப்பெயர்களை வணக்கத்தின் பொருட்டுச் சொல்லுந்தோறும், (நினைக்குந் தோறும்) ஓம் என்ற மொழியை ஒவ்வொரு திருப்பெயரின் முன்னே கூட்டிச் சொல்லுதலே (நினைப்பதே) மரபு என்பதனை அறிவிப்பான், என்று என்று*

என இருமுறை (அடுக்கிக்) கூறினர். ஆதலால், ஓம் என்ற மொழியை இருவிடத்தும் கூட்டுக. இவ்வகை அன்றி, ஓகாரத்தைப் பிரித்து இடைச் சொல்லாகக் கழிப்பின் என்று என்று என இருமுறை (அடுக்கிக்) கூறிய கூற்று நின்று பயன் இன்மையும், கூறியது கூறலும் ஆம். அன்றிப் பொருள் இயைபும் இன்றாம். நிற்க, ஓகாரத்தை விளிக்குறிப்பாகக் கோடலும் பொருத்தம் அன்று.

82. **போற்றி புகழ்ந்து இருந்து பொய் கெட்டு மெய் ஆனார்**—நின் திருப்பெயர்களை மறவாமல் புகழ்ந்து வாழ்ந்து, அதனால், பொய் அறிவு கெட்டு மெய் அறிவு பெற்றார்—உடைய,

போற்றுதல்—பாதுகாத்தல். இவண் மறத்தலைப் பாதுகாத்தல். மறத்தலைப் பாதுகாத்தல் ஆவது மறவாது இருத்தல். அப்பொருள் தருதலைச் சீவக சிந்தாமணியுள் நாமகள் இலம்பகத்தே 22-வது பாவிலே "கண் எனக் குவளையும் கட்டல் ஓம்பினர்" என்ற அடியில் "கட்டல் ஓம்பினர்" என்றதற்கு அதன் உரை ஆசிரியர் நச்சினார்க்கு இனியர், "களை பறித்தலைப் பரிகரித்தார்" என்றார். அதனால் ஓம்பினர் என்றதற்குக் "களை பறியாமையை ஓம்பினர்" (பாது காத்தார்) என்றாயிற்று. அதனால் அறிக. ஓம்புதலும், போற்றுதலும், பாதுகாத்தல் என்ற ஒரு பொருள் சுட்டிய பெயர்களாம். புகழ்ந்திருந்து என்றதனை எழுந்திருந்து என்பதுபோல ஒரு சொல்லாகவும் கொள்ளல் ஆம்.

**"மீட்டிங்கு வந்து வினைப் பிறவி சாராமே"** என்ற இவ்வடி பொருள் பொருத்தம் உற்று இருப்பினும், இவண், எதுகைக்கு ஏற்பத்துணை அடி ஒன்று இன்றித் தனித்து நிற்றலால் இடைச் செருகல் ஆம். ஆதலால் கழிக்க.

83. **கள்ளம் புலம் குரம்பை கட்டு அழிக்க வல்லானே!**—வஞ்சனையைச் செய்கின்ற ஐந்து புலன்களை உடைய உடலில் பிறத்தற்கு ஏது. ஆன தீவினையின் வன்மையை அழிக்க வல்லவனே!

குரம்பை—ஆகு பெயர். அடிகள், அடைக்கலப் பத்துள்ளும் புழுக்களுடைப் புன்குரம்பை என்றார்கள் அக்குறிப்பை நினைக்க.

84. நள் இருளில் நட்டம்பயின்று ஆடும் நாதனே!—செறிந்த இருளில் கூத்தினைப் பலகாலும் ஆடும் தலைவனே!

85. தில்லை உள் கூத்தனே! தென்பாண்டி நாட்டானே!—தில்லைத் திருப்பதியின் கண்ணே திருச்சிற்றம்பலத்தே ஆநந்தக்கூத்து ஆடுபவனே! அழகிய பாண்டி நாட்டை ஆட்சியாக உடையவனே!

86. அல்லல் பிறவி * அறுப்பாய் அரனே யேன் (அரனே என் அல்லல் பிறவி அறுப்பாய்)—அரனே! என்னைத் துன்பத்துக்கு ஏது ஆன பிறத்தலின் நின்றும் நீக்கிக் காப்பாய் ஆக.

"அறுப்பானே ஓவென்று" என்ற பாடம் "சொல்லற்கரியானை" என்ற அடி முதல் "பணிந்து" என்ற ஈறுவரை உள்ள நான்கு அடிகளும் தனிவெண்பா என்பதனை அறியாது அதனை இப்பாவின் பகுதியாக நினைத்தவரால் செறிக்கப்பட்ட இடைச்செருகல் ஆம். ஆதலால் அப்பாடம் பொருத்தம் அன்று.

அடி ஒன்று முதல் பதினாறுவரை வாழ்த்தலும், பதினேழு முதல் இருபதுவரை திருவாதவூர்அடிகள், தம் நெஞ்சில் நினைத்த நினைப்பும், இருபத்து ஒன்றுமுதல் எண்பத்து ஆறுவரை இறைவன் மாட்டு இரத்தலும், (வேண்டுதலும்) கூறியபடியாம்.

அடி இருபத்து ஒன்று முதல் இருபத்து ஐந்துவரை "பொல்லா வினையேன் புகழும் ஆறு ஒன்று அறியேன்," இருபத்து ஆறு முதல் முப்பதுவரை "எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன்" முப்பத்து ஒன்று முதல் எண்பதுவரை "வேற்று விகார விடக்கு உடம்பின் உள் கிடப்ப" எண்பத்து ஒன்றில் "ஆற்றேன்" எண்பத்து ஆறில் "அரனே! என் அல்லல் பிறவி அறுப்பாய்" எனக் கூட்டி முடிக்க.

இப்பாவின் கருத்துரை—(அடி 24-ல்) "நின் பெருமை பொருந்திய புகழினைப் (25) புகழ்ந்து சொல்லும் வழியைச்

சிறிதும் அறியாதவன் ஆகிய யான், (30) எல்லாவகைப் பிறப் புக்களிலும் பிறந்து பிறந்து வருந்தினேன். (மேலும்) (80) காலம் கழியக் கழியப் பல வேறுபாடுகள் தோன்றுதற்கு ஏது ஆன ஊன் நிறைந்த உடம்பின்கண் வாழ்தற்கு (81) வலிமை இல்லாதவன் ஆயினேன். (ஆதலால்) (86) அரனே என்னைத் துன்பத்துக்கு ஏது ஆன பிறத்தலின் நின்றும் நீக்கிக்காத்தருள வேண்டும்'' எனத் திருவாதவூர் அடிகள், இறைவன்மாட்டு விண் ணப்பித்தனர் என்று கொள்ளுக.

இப்பா இவ்வளவே—இப்பாவின் உரை முற்றிற்று.

''சொல்லற் கரியானைச் * சொல்லின் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து—சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரு மேத்தப் பணிந்து'' என்ற இந்நான்கு அடிகளும்

தனிவெண்பா. நூற்பயன் கூறிய பாயிரம் ஆம். இப்படிக் கூறுதலைப் பலசுருதி என்பர் வடமொழியார். இவ்வெண் பாவின் பொருள்—''புகழ்ந்து சொல்லுதற்கு அரியன் ஆகிய சிவபெருமானை ஒருவர் புகழ்ந்துசொல்ல எண்ணின், அவர், அச் சிவபெருமான் உடைய திருவடிக்கண் தம் மனத்தினை நிறுத்தி அந்''நமச்சிவாய வாஅழ்க'' என்ற பாட்டில் சொல்லியபொருளை அறிந்து சொல்லுவார் ஆயின், சிவபுரத்தின் உள்ளார் பலரும் தம்மை எதிர்கொண்டு பணிந்து ஏத்த அவர் அச் சிவபெரு மானின் திருவடியினைச் சென்று அடைவர்'' என்பதாம்.

சிவபுரத்தின் உள்ளார் பணிந்து ஏத்துதலைத் திருச்சேர மான்பெருமாள் நாயனார் தம்மையும், திருச்சுந்தரமூர்த்தி நாயனார் தம்மையும், திருக்கயிலாயத்தில் திரு உபமன்னிய முனிவர் முதலிய பலரும் எத்திப் பணிந்து எதிர் கொண்டமை யால் அறிக.* ''சொல்லித் திருவடிக்கீழ்'' என்றபாடம்பொருள் இயைபு இன்மையால் பொருத்தம் அன்று. சொல்லின் என்ற பாடமே பொருத்தமும் கவிக் கருத்தும் ஆம்.

இப்பா கலிவெண்பா அல்லை என்றதன் ஏதுமேல் வருமாறு.... இச்சொல்லற்கு அரியானை என்ற வெண்பா, திருமுருகாற்றுப்

படையின்கடையில் தனியாகக்குறிக்கப்பட்ட "நற்கீரர் தாமுரைத்த நன் முருகாற்றுப் படையைத், தற்கோல நாடோறும் சாற்றினல்— முற்கோல, மாமுருகன்வந்து மனக்கவலை தீர்த்தருளித் தானினைத்த வெல்லாம் தரும்." என்பது போன்ற நூற்பயன் கூறியபாயிரம் ஆகும். திருவாதவூர் அடிகள், மற்ற பாக்கள் கடையேயும், பதிகங்கள் கடையேயும், திருத்தோவாரங்களை அருளிய ஆசிரியர்கள்போல நூற்பாயிரம் (திருக்கடைக் காப்புக்) கூறியவழக்கு இன்மையால், இச்"சொல்லற்கு அரியானை" என்ற வெண்பா, அடிகளால் ஆக்கப்பட்டது அன்று. அது வேறு எவராலோ ஆக்கப்பட்டது. ஏட்டுப் புத்தகத்தே இந்"நமச்சிவாய வாழ்க" என்ற பாவின் ஈற்றில் இவ்வெண்பா, சேர்த்து எழுதப்பட்டு இருத்தலைக் கண்டவர், இவ்வெண்பாவையும் கூட்டி ஒரு பாவாக நினைத்து இந்"நமச் சிவாய வாஅழ்க" என்ற ("என்" என்னும் ஈற்றுடு முடிந்த) அகவற் பாவின் ஈற்று "என்" என்ற மொழி முன்"று" என்ற எழுத்தைக் கூட்டி "என்று" என எச்ச வாய் பாடாக்கி இச் "சொல்லற் கரியானை" என்ற வெண்பாவையும் சேர்த்து ஒன்றுபடுத்தி ஒரு பாவாக ஆக்கினர்போலும். ஒன்று படுத்திய தனி வெண்பாவின் ஈற்று வாய் பாட்டினுக்கு ஏற்ப இந்"நமச் சிவாய வாழ்க"என்ற"அகவற்பாவை" உண்மைக்கும், முன் ஆசிரியர்கள் வழக்கிற்கும், மாறுகக் "கலிவெண்பா" எனப் பெயரையும் மாற்றினர்கள். முதலாகப் பெயரை மாற்றியவர்கள், திருத்தணிகைத் திருச் சரவணப் பெருமாள் ஐயர் அவர்களே போலும்.

ஐயர் அவர்கள், தாம் பதிப்பித்த திருவாசகத்தே இந் "நமச் சிவாய வாழ்க" என்ற பாவின் கடையில் "இம்முதற் செய்யுளுக்குப் பெயர், (தமக்குக் கிடைத்த) பல பிரதிகளில் "சிவ புராணத் தகவல்" என்று எழுதப்பட்டிருக்கின்றது." எனக் குறித்தார்கள். அன்றித் தாம் இரு பாக்களையும் ஒரு பாவாக்கிப் பெயரை மாற்றியதற்கு ஏற்ப இலக்கணமும் குறித்தார்கள். ஆதலால், அவர்கள் தான், திருவாசகத்தை முதலாகப் பதிப்பித்தவர்கள் என்றும், அகவற்பா என்ற பெயரைக் கலிவெண்பா என மாற்றியவர்கள் என்றும், யான் நம்புகின்றேன்.

திருக்குறள்—திருவள்ளுவ மாலையுள் "ஆவனவும் ஆகாதன வும் அறிவுடையார், யாவரும் வல்லார் எடுத்து இயம்பத்—தேவர், திருவள்ளுவர் தாமும் செப்பியவே செய்வார், பொருவில் ஒழுக்கம் பூண்டார்." என்ற வெண்பாவினுக்குச் "சொல்லுதல் யார்க்கும் எளிய, அரியவாம் சொல்லிய வண்ணம் செயல்." என்ற தேவர் தம் திருமொழிக்கு ஏற்ப "அறிவு உடையார் யாவரும் ஆவனவும் ஆகாதனவும் ஆகிய விதி விலக்குகளை விதந்து சொல்ல வல்லவர்கள் அன்றிச் சொல்லியபடி ஒழுக வல்லவர் அல்லர். தேவர் திருவள்ளுவர் தாமும் பொருவில் ஒழுக்கம் உடையார் ஆதலால் சொல்லியபடியே செய்வார்." எனச் செவ்விய நெறியில் பொருள் கொள்ளக் கிடந்தும், திருத் தணிகை + ஐயர் அவர்கள், "மக்களுக்கு ஆவனவும், ஆகாதன வும், அறிவுடையர் யாவரும் இனி இதிலிருந்து எடுத்துச்சொல்லு தற்கு வல்லவர் ஆவர் ஆதலால், தேவராகிய திருவள்ளுவராலே சொல்லப்பட்டவற்றையே ஒப்பில்லாத ஒழுக்கத்தை மேற் கொண்டவர் செய்வார்." என்று உண்மைக்கும் பாயிர முறை மைக்கும் மாறுய்ப் பொருள் எழுதினர்கள். (திருக்குறள்—திருநாவலர் தம்பதிப்பு) ஆதலாலும், திருவாசகத்தே "போகம் வேண்டில் வேண்டிலேன்" என்ற பாவில் இடை அடியில் சீர் குறைவு பட்டு இருந்தும், குறைவைக் குறித்துக் காட்டாமலும், நிரைத்துக் கூட்டாமலும் விட்டு இருத்தலாலும், திருவாச கத்தே பல இடங்களில் பிழைகள் செறிந்து இருந்தும், அவை களை எடுத்துக் காட்டாமல் விட்டு இருத்தலாலும் அவர், தம் ஆய்வில் ஆழ்ந்து சூழ்ந்திலர் போலும்.

ஆசிரியர் பெரும்பற்றப் புலியூர் நம்பிகள், தம்மால் ஆக்கப் பட்ட திரு ஆலவாய்த் திருவிளை ஆடல் புராணத்தே "நமச் சிவாய வாழ்க" என்ற முதற் குறிப்பால் இப்பாவைக் குறித் தார்கள். ஆயினும், திருவாதவூர் அடிகள் புராண ஆசிரியரும், பழய திருப்பெருந்துறை புராண ஆசிரியரும் ஆகிய இரு ஆசிரி யர்களும், தங்களால் ஆக்கப்பட்ட புராணங்கள் இடையே இப் பாவை "அகவற்பா" என்றே குறித்தார்கள். அவ்விரு புராண ஆசிரியர்களும் யாப்பு இலக்கணம் அறியாமலே புராணம் செய் தார்கள் என்று சொல்லுதல் பொருத்தம் அன்று.

அவ்விரு புராண ஆசிரியர்கள் காலத்தே "நமச் சிவாய வாழ்க" என்ற இப்பா ஐயம் அற "அகவற்பா" ஆகவே இருந்தது போலும். திருவாசகத்தை முதலாகப் பதிப்பித்த திருத்தணிகை + ஐயர் அவர்களே தம் மனப் போக்கின்படி இவ்வகவல் பாவின் ஈற்றில் நின்ற பாயிரம் ஆகிய "சொல்லற்கு அரியானை" என்ற தனிவெண்பாவைக் கூட்டி அவ்வெண்பாவின் ஈற்றினுக்கு ஏற்ப இவ் வகவல் பாவுக்குக் கலிவெண்பா எனப் பெயர் கூறினார்கள். அவர்கள், நன்கு ஆழ்ந்து சூழாது 'கலிவெண்பா" எனக் கூறிய முடிபினை நம்பிய பிறரும் நன்கு ஆழ்ந்து சூழாதவராய் "கலி வெண்பா" எனவே முடிபு கூறினார்கள். மேலே குறிக்கப்பட்ட ஏதுக்களினால், இந் "நமச் சிவாய வாஅழ்க" என்ற பாவைக் கலிவெண்பா எனல் பொருத்தம் அன்று. இப்பா, (இன்றுள்ள தளைக்கு ஏற்ப) முற்றும் வெண்தளையால் நடந்து "என்" என்ற ஈற்றொடு முடிந்த "நிலை மண்டில ஆசிரியப்பா" எனலே பொருத்தமும் கவிக் கருத்தும் ஆம்.

இவ்வகவல் பாவைக் "கலிவெண்பா எனக் கூறுபவர் கூற்றுக்கு ஏற்ப இப்பாவின் ஈற்று (86) அடியில்" அல்லல் பிறவி அறு என்றவரை நிறுத்திக் கொண்டால் கலி வெண்பாவுக்கு உரிய ஈறு நின்றபடியாம். அவ்வீற்று அடியின் கடைப்பகுதியை இடைச் செருகல் ஆம் எனக் கழிக்க. அப்படிக் கழிப்பினும், "சொல்லற் கரியானை" என்ற நான்கு அடிகளும், நூற்பாயிரம் ஆகிய தனி வெண்பாவாம். ஆயினும் யான் மேலே காட்டிய ஏதுக்களின்படி இந் நமச் சிவாய வாஅழ்க என்ற பாவை (இன்றுள்ள தளைக்கு ஏற்ப) முற்றும் வெண் தளையால் நடந்து "என்" என்னும் ஈற்றொடு முடிந்த "நிலை மண்டில அகவற்பா" எனலே உண்மையானதும், பழமையானதும் ஆகிய பெயர் என்பது என் முடிபும் துணிபும் ஆம். வாரம் பட்டுழித் தீயவும் நல்லவாம், தீரக் காய்ந்துழி நல்லவும் தீயவாம், ஒரும் வையத்தியற்கை" என்ற சீவக சிந்தாமணியார் திருமொழியை அறிந்த தமிழ் உலகு இவ்வாய்வினை நடு நின்று ஆய்ந்து தக்கது ஒன்றனை எடுத்துக் காட்டும் என்ற நம்பிக்கையால் இவ்வாய்வினை யான் வெளியிடலை விரும்பினேன்.

இவ்வகவல் பாவைத் தம் மயக்கத்தால் முதலாகக் "கலி வெண்பா" எனப் பெயரை மாற்றிக் கூறிய திருத்தணிகை ஐயர் அவர்களே, இப்பாவின் இடையே பலஇடங்களில் அகவல் பாவிற்கு உரிய இயல் தளைகளை எழுத்துக்களைக் கூட்டியும், மாற்றியும் வெண்தளையாகச் செய்து இருத்தலும் கூடும். அவைகளை இன்று ஆய்ந்து முற்றும் களைய முயலுதல் இயலாமையே ஆயினும், தட்டலும், மாற்றலும் செய்யப்பட்ட இடங்களுள் பலவற்றை நடு நின்று ஆயும் நல்ல அறிஞர் என்றும் அறிவர்.

இப்பாவிடையே என்னால் குறிக்கப்பட்ட திருத்தங்களைப் பற்றியும், உரையிடையே குறிக்கப்பட்ட பொருள் இயையைப் பற்றியும், தங்கள் எண்ணத்தினை வெளியிட விரும்பும் நல்ல அறிஞர்கள், வன்சொல் கொண்டு வரையார்கள் என யான் நம்புகின்றேன். அவர்கள், "ஆக்கமும் கேடும் அதனால் வருதலால், காத்து ஓம்பல் சொல்லின்கண் சோர்வு." என்ற பொய்யா மொழியைப் போற்றி வாழ்பவர்கள் ஆதலால், அவர்களின் நன் மொழியை யான் பொன்னே போல் போற்றுவன். அல்லாதவர்கள், எவ்வகையால் எத்துணை வேண்டினும், இன்சொல் கொண்டு எழுத எண்ணார்கள். அவர்கள், "இனிய உளவாக இன்னாத கூறல், கனியிருப்பக் காய் கவர்ந்தற்று" என்ற மெய்ம் மொழிக்கு மெய்யராய் வாழ்பவர்கள் ஆதலால் யான், நலத்தின் கண் நாரின்மை தோன்றின் அவனைக், குலத்தின்கண் ஐயப் படும்," என்றும் "ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே தீய, வழுக்கியும் வாயாற்சொலல்," என்றும் அருளிய தேவர்தம் திருமொழிகளைப் போற்றுவான், அவர்களின் துன்ப மொழியைத் தூற்றுதலும் செய்யேன்.

நிழலின் பெருமை அன்ன பேர் அறிஞர் தம் உரையின் பெருமையை அறிதற்கு வெய்யலின் சிறுமை என்ன அமையும் என யானும் இச்சிற்றுரையினை எழுதினேன்.

"அரிய கற்று ஆசு அற்றார் கண்ணும் தெரியுங்கால்
இன்மை அரிதே வெளிறு."

"குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகை நாடி மிக்க கொளல்.

இவ் வாய்வு உரை முற்றிற்று.

வணக்கம் திருவாத வூரர்தம் திருவடிகட்கே.

## அடியேன் கருத்து.

முத்து. சு. மாணிக்கவாசகன், ஆரணி.

அடியேன் திருவாசகத்தில் "முந்தை வினைமுழுதும் மோய வுரைப்பன் யான்" என்பதில் உள்ள 'மோய' என்பது 'முடிய' என்னுஞ் சொல்லின் மரூஉவாகும். முடிய என்பது மோய என மரூஉதல் இயல்பு. பதிற்றுப்பத்து 22-ல் மூயின, 42-ல் மூய என வந்துளது. "பரணர்" 216-ம் பக்கம் பார்க்க. முகவாய்-மோவாய், தொகுப்பு—தோப்பு, பகுதி—பாதி, விடுதி—வீதி, உவலை—ஓலை, புகுந்து—போந்து, அருந்து—ஆர்ந்து, நிகளம்—நீளம், நிகர்—நேர், தவறு—தாறு, நெருநற்று—நேற்று, என்பன போல்வன இங்கு நோக்கத் தக்கன. முடிய, மூய, மோய, என்பன ஒருபொருளன. முந்தை என்றதற்கு, மோய என்பது மோனையாய்ப் பொருந்துவது கருதற்பாலது. யான் முந்தை வினை முழுதும் முடியச் சிவபுராணந்தன்னை உரைப்பன் எனச் செம்பொருள் கொள்வதே சிறந்தது. இஃது அடியேன் கருத்தாகும். இக்கருத்தை அறிவிக்கத்தூண்டியது நம்மொழி யின் (துணர் கஉ. மலர் ௰. பக்கம் 380ல் உள்ள) செய்தியே. இக்கருத்துப் பொருந்துமேற் கொள்ளுக. இன்றேல் தள்ளுக. அடியேன் பாட்டுக்கு அடியேன் பொருள் தவறுதல் வியப்பே.

## திருக்குறளுதலிய நெறிமுறை

திரு. K. சோமசுந்தரம் பிள்ளை B.A., B.L., தஞ்சை

(முற்றொடர்ச்சி துணர் 13. மலர் 2. பக்கம் 68.)

அரசற்கு தீதின்றி வரும் பொருளை எடுத்துரைக்க வந்த நாயனார் 'உறுபொருளு முல்கு பொருளுந்தன் னொன்னார்த், தெறுபொருளும் வேந்தன் பொருள்' எனக் கூறலுற்றார். போர் வயிற்சென்று பொருளீட்டுதல் அரசற்குரிய முறையெனவும்

இக் குறட்பா தெளியப் படுத்துவதால், அரசர்க்கு ஆக்கம் தருவது அறப்போரேயன்றி மறப்போரன்று. அரசன் சான்றோர் பழிக்கும் வினையினைச் செய்யாது அறப்போரிலே பெறும் பொருளைச் சேர்த்தல்வேண்டும். அவ்வாறில்லாது மறப்போரினில் பெறப்பட்ட பொருளெல்லாம் பச்சை மட்கலத்தே நீர் நிறைத்து வைத்ததுபோன்று நில்லாதழியுமென தெய்வப் புலவர் 'சலத்தாற் பொருள் செய்தே மார்த்தல் பசுமட், கலத்துணீர் பெய்திரீஇ யற்று' என விளங்க வைத்தது அறியத் தக்கது. அறப் போரினையியற்றும் மன்னன் மாற்றரசரோடு போர் செய்தல் பேராண்மையானும் அம்மாற்றரசர் வலியிழந்து தாழ்வு உற்றுழுங்கில் அதுபோது பெருந் தன்மையுடையனாய் அவர் மீது இரக்கமும் அன்புங்கொண்டு அருளொழுகு கண்ணும் அறங்கிடந்த நெஞ்சு முடையவராயிருத்தல்வேண்டும். இஃது அரசர்க்குரிய ஆண்மைக்கு அழகாகும். இதனை நாயனார் 'பேராண்மையென்ப தறுகணொன்றுற்றக்கா, லூராண்மை மற்றதனெஃகு', என அருளிச் செய்தார். எனவே அறப்போரியற்றும் அரசன் பகைவர்மேற் படையெடுத்து போர் செய்யத் தொடங்குமுன் மாற்றாது வலியும் இடமும் காலமுமறிந்து போரில் முற்படல்வேண்டும். ஞால முழுவதையும் கைப் பற்றக் கருதும் மன்னர் காலம் கருதியிருப்பர். ஆகவே இவர்கள் பகைமன்னர்களைப் போரில் புறங்கண்டு, வெற்றி கொள்ள விரும்புவாராகில் தகுந்த இடனறிந்து போர் செய்தல் வேண்டும். அவ்வாறு இடந்தவறி செல்லத் தகாத இடத்தில் சென்று படையிலும் பலத்திலும் மிகக் குறைந்த பகை மன்னர் பால் செல்லும் பெருவலிகொண்ட அரசரதுபடையும் இடருற்று தோல்வியுறும். இதனை

(1) நெடும் புனலுள் வெல்லுமுதலை யடும்புனலி
னீங்கின் அதனைப் பிற

(2) காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா
வேலாண் முகத்த களிறு

என உவமை முகத்தால் உலகப் பொருள்களின் உண்மையினை யெடுத்துக் காட்டும் குறட்பாக்களான் மிக அழகுபட பெரு

நாவலர் அருளியது அறியத்தக்கது. மற்றும் இடனறிந்து போர் செய்வதுமல்லாமல், வெற்றி வேட்கையுடைய அரசர்கள், பகைவர்க்கு வலிகுன்றியகாலமும் தனக்கு வலிய காலமுமறிந்து நீரும் உணவுங் கிடைத்தற் குரிய காலத்தில் போர் செய்தல் வேண்டுமென 'பகல் வெல்லுங் கூகையைக் காக்கை யிகல்வெல் லும், வேந்தர்க்கு வேண்டும்பொழுது' என்ற குறட்பாவால் திருவள்ளுவர் அறிவிக்கின்றதை உற்று நோக்குக. கூர்ந்து நோக்குங்கால் மன்னர்களுக்குப் போரினில் வெற்றி தருவது கூரிய வேலன்று அவனது பெரும் படையுமன்று, பின்னர் யாதெனின் அவனது நீதி தவறு செங்கோல் ஆட்சியே. இந்த உண்மையினை 'வேலன்று வென்றி தருவது மன்னவன், கோலதூ உங் கோடாதெனின்' என்ற குறட்பாநன்குணர்த்தும்; அந்தண ரது நூற்கும் அறத்திற்கும் ஆதியாய் நிற்கும் மன்னவனது செங்கோலை நோக்கி குடிகள் வாழுமாதலான், அரசன் குற்றம் ஆய்ந்துணர்ந்து குடிகளிடத்தும் நடுவு நிலைமை பொருந்தி செங் கோலோச்சல் வேண்டும். இதனுண்மை 'ஓர்ந்து கண்ணோடா திறை புரிந்தியார் மாட்டுங், தேர்ந்து செய்வஃதேமுறை' என்ற குறட்பா விளக்குதல் காண்க. குடிகளிடத்தே நடுவு நிலைமை யினின்று ஒழுகும் அரசன் குடி புறங்காத்தோம்பிக் குற்றங் கடிதலும் வேண்டும். 'தண்டமுங் கருணை யென்றறி வாயே' என்பது கைவல்லியம். இத்தகைமையாய் நீதின்றிக் குடிகளைக் காக்கும் அரசன் குடிகளினால் இறைவனெனப் பெரிதும் பாராட் டப்படுவன்; உழவர் களையெடுப்பதாக பைங்கூழ் வளம் பெற்று வளருதல் போன்று நாட்டின் நலம் சிறக்க மன்னர்கள் குற்றங் கடிதலைக் கைக் கொளல்வேண்டும். கொலையினாலே கொடியவரை மன்னன் தண்டிக்காத இடத்துப் புல்லுக்களைக்கு அஞ்சுகின்ற பயிர் போன்று குடிமக்கள் பல அல்லலுற்று துன் பப்படுவர். இதனை திருவள்ளுவர் 'கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ், களைகட்டதனொடுநேர்' என எடுத் துரைப்பது கருதத்தக்கது.

கொடுங் குற்றமியற்றும் கொடியாரையும் அவர் செய்யும் குறும்பையும் அரசன் ஒற்றரால் உணரவேண்டியதால் ஒற்

ருடல் அரசற்கு இன்றியமையாததாகும். ஒற்றரை ஆளாத மன்னனுக்கு கொற்றம் இல்லையென்பது 'ஒற்றனெற்றிப் பொருடெரியா மன்னவன், கொற்றங் கொளக் கிடந்ததில்' என்ற குறளால் விளங்கும். அதனால் அறத்தைப் போற்றும் அறிவுடைய அரசன் தன்னுட்டினிலே நிகழக் கூடிய இயக்கமும் தியக்கமும் வயக்கமாய்த் தெரிந்து உணர்த்துபவராகிய ஒற்றரை அமைத்துப் பேணுவர். அரசனுக்குப் பல்வகைத் தொழிலால் காரியமியற்றுபவரையும், சுற்றியிருக்கும் சுற்றத்தாரையும் வேண்டப்படாத பகைவரையும் ஆய்ந்து அவரது தன்மை குணம், செயல் முதலியன அவ்வப்போது அரசனுக்கு யாவருமறியாவண்ணம் அறிவுறுத்தும் தொழிலையுடையவர் தாம் ஒற்றரென்று ஒற்றரின் தொழிலை திருவள்ளுவர் 'வினை செய்வார் தஞ்சுற்றம் வேண்டாதாரென்றாங், கனைவரையு மாராய்வதொற்று' என உற்றறிந் துணர்த்தியது அறியத் தக்கது. மற்றும் ஒற்றர் கூறும் கூற்று உண்மையாவெனத் தெரிந்து அதன்படி பின் அரசியல் மேன்மைக்காக நடக்க வேண்டியவைகளைச்செய்தற்கு ஒற்றர் தங்களை ஒற்றரிஞல் தலும் அரசர்க்குரிய கடனுகும். இதனை 'ஒற்றொற்றித் தந்த பொருளையு மற்றுமோ ரொற்றினு லொற்றிக் கொளல்' என முதற் பாவலரால் உணர்த்தப்பட்டது பாராட்டற் குரியது. மற்றும் திருவள்ளுவர் அறிவுடை அரசன் மெய்ம்மை வெளிப்பட ஒற்றரை எவ்வாறு ஆளவேண்டிய முறைமையினையும் 'ஒற்றொற்றுணராமையாள்கவுடன் மூவர், சொற்றொக்க தேறப்படும்' என்ற பொய்யா மொழியால் அறைதலுற்றார்.

முறை செய்து அறமும் செலுத்தி குடிகளையோம்பும் மன்னன் அவர்களை வருத்தாது அவர்களிடமிருந்து கிடைக்கப் பெறும் இறைப் பொருளைப் பெறுதல் வேண்டுமென அற நூல் கூறுநிற்கும். இவ்வாறில்லாது குடிகளின் மனம் நொந்து துன்பத்தால் பெறப்படும் இறைப்பொருளே மன்னனுக்கு பெருங் கேடு விளைவிப்பதாகும். 'அல்லற் பட்டாற்று தழுத கண்ணீரன்றே, செல்வத்தைத் தேய்க்கும்படை' என்பது தமிழ்மறை. கண்ணகல் ஞாலத்தில் வாழுமுயிர்கள் மழையின்மையால் எவ்

வாறு துன்புறுமோ அவ்வாறே அளியானது சிறிதுமில்லாது ஆளும் வேந்தனது நாட்டிலுள்ள குடி துன்புறும். உயிர்களெல்லாம் மழையினை நோக்கி வாழுமென்றாலும், மழையாலாகும் உணவுப் பொருளிருந்தும், மன்னன் நீதியில்லாதயிடத்துப்பயன் ஒரு சிறிதுமிலவே. அத்தகைய நாடு கடும்புலி வாழும் காடே. ஆகவே குடிகளையோம்பிக்காக்கும் மன்னனைக்காப்பது அவனது செங்கோலே யெனப் பெற்றாம். இச்செங்கோன்மை மன்னர்களுக்கு இல்லையாயின் உலகினைக் காக்கும் அவனது ஒளி இல்லையாயிற்று. 'மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேன், மன்னுவா மன்னர்க்கொளி'.* என்ற குறட்பா ஈங்கு கருதத் தக்கது, இவ்வொளி அவன்பால் இல்லையாயின் அம் மன்னனைக் குடிகள் இறைவனாகக் கருதி ஒழுகார். குடிகளையோம்பி உலகம் காக்கும் வேந்தனை குடிகள் 'இவர் இளையர்' என்றது போன்ற சிறு சொற்களையும் உளையக் கூறாது அவர் பாலிருக்கின்ற ஒளியைக் கருதி போற்றி ஒழுகவேண்டுமென்பதை 'இளையரின முறைய ரென்றிகழார் நின்ற, வொளியோடொழுகப்படும்' என்ற குறளால் திருவள்ளுவர் எடுத்துரைத்ததால், வேந்தன் குடிகளிடத்து நடந்து கொள்ளும் ஒழுக்கமும், குடிகள் வேந்தன்பால் நடந்து கொள்ளும் ஒழுக்கமும் அறியலாயிற்று.

இனி, செங்கோல் வளைதலுறாது அரசியல் நடாத்தும் அரசற்கும் அவ்வரசற்கு அருந்துணையாயிருக்கும் அமைச்சருக்கும் இன்றியமையாத வினைத்திட்பம், வினைத்தூய்மை, அவையறிதல் அவையஞ்சாமை, குறிப்பறிதல், தூது, மன்னரைச் சேர்ந்தொழுகல் முதலிய ஒழுக்கங்களைச்சிறிது ஆராய்வோம். அரசற்கு அமைச்சர் அவயவம் என்றருளினர் அறிவு நூலுடையார். கூர்த்த மதிவளம் மிக்குடையராய் அரசற்கு அறமும் நீதியும் ஆக்கமும்கூறி திண்ணிய நெஞ்சத்தோடு விழுத்தகு மொழிகளை பேசும் திறனுடையராய்த் திகழ்பவரே அமைச்சராதற்குரியர். மதிநுட்பம் நூலோடுடையராகிய அமைச்சர் தீநெறியிற் படரா

---

* 'உறங்கு மாயினு மன்னவன் றன்னொளி,
கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்' —சீவக சிந்தாமணி.

உள்ளத்தராய் நன்னெறியுற்று அரசாது செங்கோல் வழுவா திருக்க அவன் நலம் நாடி அவன் மனதை அறவழியில் திருப்பி எஞ்ஞான்றும் நல்லறமே இயற்றுமாறு ஊக்கியும், அவன்மனம் தீயவழியிற் சென்றுழி அவ்வரசற்குப் பலபடச் சொல்லி அவ் வண்ணம் அவனதுமனம் போகவொண்ணுதே தடுத்தும் அவன் றன் இசை மாற்றியும் அவனைப் பொதுவறப் புரக்கும் அற நெறிச் செல்வராகவும் அருளுடைச் செல்வராகவும் திருத்தி வழிப்படுத்தி அறங் காப்பார்.

இத்தகைய அமைச்சருக்குரிய அருங் குணங்களில் சிறப்பு வகையான் முதன்மைபெற்றது சொல்வன்மை. சொல்லென்பது யாதெனின் அஃது 'கேட்டார்ப் பிணிக்குந்தகையவாய்க் கேளா ரும், வேட்ப மொழிவதாஞ் சொல்' என்றார் திருவள்ளுவப் பெருந்தகையார்; இச்சொல்லால் ஆக்கமும் கேடும் வருதலான் நாநலமென்ற நலனுடைமை அமைச்சருக்கு இன்றியமையாதது; அமைச்சர், சொல் வன்மை வாய்க்கப்பெற்று சாற்றும் மாற்றத் தினடைதெரிந்து அரசவையின் குறிப்புநோக்கி அவையகத்தே அஞ்சாது கூறும் பான்மையினை யுடையரா யிருத்தல் வேண்டும். மற்றும் பேசுந்திறமையான் அமைச்சர், வருந்து வோரையும் வருந்துவோரையும் மகிழ்வித்தலில் வல்லராயிருத் தல்வேண்டும். இத்தகையாரை வெல்லுதல் யாவர்க்குமரிதென 'சொலல் வல்லன் சோர்வில னஞ்சா னவனை, யிகல் வெல்லல் யார்க்கு மரிது' என்ற குறட்பா விளங்க வைக்கும், இவ்வாறு பேசுந்திறன்வாய்ந்த அமைச்சர்கள் அரசனைச்சூழ்ந்து அரசியல் நடாத்துங்கால் போர் முதலியவை நேர்ந்துழி, தம் பகைவர்க் குத்துணையாயினரை அவரிடமிருந்து பிரித்து விடுதலினும், தம் பக்கல் சார்ந்தாரை பொருள் கொடுத்துதவியும், மகிழ்விக்கும் இனிய மொழிகளை அமையமறிந்துரைத்து அவரைப் பேணிக் கொள்ளுதலினும், தம்மைவிட்டுப் பிரிந்தாரை மீண்டும் தம்மிடம் பொருந்தும்படி கருவியும் காலமுமறிந்து செய்தலினும் கைபோ யவர்களாதல் வேண்டும். இதனை 'பிரித்தலும் பேணிக் கொள லும் பிரிந்தார்ப், பொருத்தலும் வல்ல தமைச்சு', என்ற குறட் பாவில் நாயனர் விளங்க வைத்தலை நோக்குக. இவ்வாறியற்றும்

தொழிலில் அமைச்சர், சான்றோர் பழிக்கும், புகழொடு நன்றி பயவா வினைகளைச் செய்யாது உண்மை நெறியில் தவருதொழுகல்வேண்டும். மேலும் மனம் தெளிந்து செய்வதாகத் துணிந்த தொழிலிடத்து அஃது முடித்தற்குளதாகும் முயற்சியையும், அதற்கு வரும் இடையூற்றினை நீக்கி முடித்தாலெய்தும் பயனும் சீர்தூக்கிப் பார்த்து, 'சூழ்ச்சி முடிவு துணிவெய்தலத் துணிவு, தாழ்ச்சியுட் டங்குதறீது' எனத் தேர்ந்து பின்னிடுதலும் தாமதமுமின்றி, 'பொருள் கருவிகாலம் வினையிட ஞேடைந்து மிருடீர வெண்ணி' இவ்வமைச்சர்கள் எடுத்த தொழிலை துணிவுடன் செய்யக் கடவர்.

அறமுதலிய நாற்பயன்களையும் விளங்க அரசனுக்குச் செவியறிவுறுக்கும் அமைச்சர், தம்மை அரசனுக்கு அடிமையாக்கிக் கொள்ள முற்பட்டில்லாராய் மனதைத் திட்பமும் செப்பமுமுடையராய் அரசரைவிட்டு மிக நீங்காமலும் அவரிடம் மிக நெருங்காமலும் தீக்காய்வார் போன்றொழுகக் கடவர். மற்றும் அமைச்சர், தந்நலம் மறந்து, மன்னரால் விரும்பப்பட்டவைகளைத் தாம் விரும்பாது அவரது சுகமொன்றினையே மதித்து ஆங்கே இறந்த சிந்தனையுடையரா யிருத்தல்வேண்டும். 'மன்னர் விழைப விழையாமை மன்னரான், மன்னிய வாக்கந்தரும்' என்பது பொதுமறை. அரசரது முன்னிலையில் அமைச்சன் தன் அண்மையிலிருப்பாரது செவியிலே ஒன்றைச் சொல்லுதலையும், பிறர் முகநோக்கி நகையாடுதலையும் நீக்கி ஒழுகக் கடவரென்று தெய்வப்புலவர் 'செவிச் சொல்லுஞ் சேர்ந்த நகையுமவித் தொழுக, லான்ற பெரியா ரகத்து' என்ற வாயுறை வாழ்த்தால் விளக்கியுள்ளார். அரசன் நமக்கு நெடுநாட்ப் பழக்க முடையனுதலின், பண்பல்ல செய்யின் அம்மன்னன் பொறுப்பன் எனவும் அமைச்சர் கருதாதிருத்தல்வேண்டும். ஏனெனின், இவ்வுரிமை அமைச்சருக்கு பின்னர் கேடுவிளைவிக்குமாதலான், இஃதுபற்றியன்றே நாயனர் 'பழையமெனக் கருதிப் பண்பல்ல செய்யுங், கெழுதகைமை கேடுதரும்' என்றுணர்த்தியது உளங்கொளற்பாலது. (தொடரும்.)

# இன்றும் அன்றும்

திரு. அ. சிதம்பரநாதன் செட்டியார் அவர்கள் M.A.,
தமிழ் விரிவுரையாளர், அண்ணமலைநகர்

இன்று இரண்டு பெண்கள் அழுத கண்ணுஞ் சிந்தியமூக்கு மாக நிற்கிறார்கள். எதிரே மதியத்தின் வெண்ணிலவு தோன்று கிறது. அண்ணாந்து நோக்கி வெண்ணிலாக் காணும் அவர்கள் இன்று பௌர்ணிமை என அறிகிறார்கள். அறிந்தவுடன் கண்ணீர் இன்னும் பெருகுகிறது. அருகே யிருக்கும் புலவர் "கலங்காதீர், மகளீர்" என்கிறார். உள்ளடக்கிய அவலத்தொடு அந் நங்கையர் ஒன்று நவில்கிறார்கள். அது இது:—"சென்ற உவவு நாளில் எம் தந்தையும் இருந்தார்; எங்கள் நாடும் எங்களதாய் இருந்தது. இந்நாளிலோ அந்தோ! எந்தையும் இல்லேம்; எம் நாடும் பிறர் கொண்டார்!" அற்றை நாளிற்கும் இற்றை நாளிற்கும் உள்ள வேறுபாடு என்னே என்று எண்ணும் புலவர் பெருமானும் நீர் வார் கண்ணினராய் அடியெடுத்து வைக்க மாட்டாது நின்கின்றார். பின் அப்பெண்டிரைத் தேற்றியழைத்துச் செல்கின்றார். வழியில், சில உப்பு வண்டிகள் உமணராற் செலுத்தப்பட்டு வருகின்றன. புலவரும் இருமகளிரும் ஒருசார் ஒதுங்கி நிற்கின்றனர். நின்றவண்ணம் வண்டியை எண்ணுகிறார்கள் வனிதைய ரிருவரும். புலவர் இரங்குகிறார்: பாவம்! இப்பெண்களின் முன்னைய நிலைஎது? இப்போதைய நிலைஎது? ஆ! அன்று, தமது தந்தையின் வலியினை யறியாது, மாற்றார் சிலர் துணைவலியும் இடவலியுமில்லாதே தமது தந்தையொடு பொருவதற்கெனத் தொலையில் வருங்கால், மாடத்தின் மீதிருந்து அவரது அறியாமைக்கு இரங்கி அவர்தம் எண்ணினைக் கணக்கிட்ட இவ்விரு மகளிரும், இன்று ஈத்திலைக் குப்பையின்மீது நின்று உப்பு வண்டிகளை எண்ணலாயிற்றே! அன்று பெரிய மாடமாளிகை கூடகோபுரங்களில் இன்னகையொடு வாழ்ந்த இவர், இன்று சிறிய இல்லின்கண் பீர்க்கங்காய் காய்த்த இடத்திலும் சுரை படர்ந்த இடத்திலும் சற்றுமுன் இன்னலொடு தங்கநேர்ந்ததே!!

இவற்றையெல்லாம் கண்டுவைத்தும் நான் இன்னும் உயிருடன் உள்ளேனே!!! தனக்கேயுரிய பறம்புநாட்டு முந்நூறுஊர்களையும் பரிசிலர்க்கு ஈந்துவிட்ட என் நண்பன் பாரியின் புதல்வியர் இவ்விருவர்க்கும் ஒருவரும் இல்லையே! ஆ, ஆ!! பாரியாகினும் உளனு!!! அவனையும் வஞ்சித்தனரே!" இன்னணம் அலமரும் அப்புலவர் கபிலரைவிட்டு இன்னெருரு புலவர் சொற்களை நோக்குவோம்.

"என்னே இது! இதுதானே முன்னர் நாளங்காடியும் அல்லங்காடியும் நிறைந்து, பல்வகைப்பட்ட மக்களும் இயங்குதலால் ஒருவர் மார்பிற் பூசிய சந்தனம் நெருக்கத்தான் பலர் மார்பிற் பட்ட பெருந்தெருவாய் இருந்தது? முன் தேர் பல குழித்த இத்தெரு இப்பொழுதோ கழுதைகள் பலவற்ருல் உழப்பட்டுக் கேடடைந்து கிடக்கிறது! அண்மையில் உள்ள வயல்களிற் பயிர்கள் செழித்து வளர்ந்தோங்கி முன்னரெல்லாம் நின்றன. புள்ளினங்கள் அப்பயிர்களில் இருந்த வண்ணம் முன்னெல்லாம் இன்னெலி எழுப்பி இன்புறுத்தின. இற்றைஞான்ரே, வயல் வயலாயில்லை. குதிரைகளின் குளம்புகளால் பயிரெல்லாம் அழிந்தொழிந்து போகும்படி வீரரால் தேர் செலுத்தப்பட்டுப் பாழ் நிலமே காணப்படுகிறது." இங்ஙனம் ஒன்னர் நாடு அழிந்ததற்கு இரங்கி ஒரு புலவர் தம்மரசன்முன் பாடுகின்ருர். அவர் பெயர் நெட்டிமையார். இப்புலவர் சொல்லோடு மேனுட்டுப் புலவர்திலகர் **கோல்டுசிமித்து** என்பாருடைய சொல்லை ஒப்பிட்டு நோக்கலாம். பின்னவர் தாமெழுதிய "ஒரு நகரின் நள்ளிரவுக் காட்சி" என்ற கட்டுரையில், நாடு காடாகும் என்னும் நியதியை விளக்குமிடத்திற் பின்வருமாறு உரைக்கின்ருர்:— "பூடுகள் நிறைந்த இவ்விடத்தேதான் அவர்தம் அரண் இருந்தது. இஞ்ஞான்று நஞ்சுடைப்பூச்சிகளும் புழுக்களும் இயங்கும் இவ்விடத்திற்முன் அவரது அத்தாணிமண்டபம் இருந்தது. இன்னதென்று அறிய முடியாதபடி சிதறுண்ட கற்கள் குவிந்துள்ள இங்கேயே அவருடைய நாடக மேடைகளுங் கோவில்களும் இருந்தன. பெருவாழ்வும், பேரவாவுமே அவை விழுந்து கிடப்பதற்குக் காரணம்." இதனை நெட்டிமையார் வாக்கோடு சேர்த்துப் படிக்குங்கால்,

"நரைமூ தாளர் நாயிடக் குழிந்த
வல்லின் நல்லகம் நிறையப் பல்பொறிக்
கான வாரணம் ஈனும்
காடாகி விளியும் நாடுடை யோரே"

என மருதனிளநாகனார் மொழிந்ததும் நினைவுக்கு வருதல் இயல்பே. "முன் கடவுட் கோட்டமா யிருந்தபொழுது சில நரை கிழவர்கள் சூதாடிய ஒரு மூலையில் அடிக்கடி சூதாடு கருவி பட்டுக்குழிகள் உண்டாயிருந்தனவன்றே! அக்குழிகளில் இப்பொழுது காட்டுக்கோழிகள் முட்டையிடுகின்றன!! ஆ! உன் பகைவருடையநாடு காடாயினதே" என இரங்குவார்போன்று தமது அரசனாகிய பாண்டியனொருவனது வெற்றியைப் பாடிய இடம் அது.

இவற்றிற்கெல்லாம் இலக்கணம் போன்றிருந்து, இன்ப நிலையாமையையும் செல்வ நிலையாமையையும் செவ்விதின் வற்புறுத்துவன போன்றுள கீழ்வரும் இரண்டு நாலடி வெண்பாக்களும்:—

"யானை யெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச்
சேனைத் தலைவராய்ச் சென்றோரும்—ஏனை
வினையுலப்ப வேறாகி வீழ்வர்(தாங் கொண்ட
மனையாளை மாற்றார் கொள)."

"அறுசுவை யுண்டி யமர்ந்தில்லா ளூட்ட
மறுசிகை நீக்கியுண் டாரும்—வறிஞராய்ச்
சென்றிரப்பர் ஓரிடத்துக் கூழெனிற் செல்வமொன்று
உண்டாக வைக்கற்பாற் றன்று."

இவண் ஏன் அவ்வளவு புகை? ஓ, ஓ, பிணம் சுடுகாடு போலும்! ஆம், ஆம், நரிகள் ஓடுகின்றன. அவ்வுருவங்கள் பேய்கள்போலும்! அதுதான் கோட்டான்குரலோ? இஃதென்ன, ஈண்டும் யாழிசை கேட்கிறது. அன்று, குழலிசை அது. இல்லை யில்லை அப்பெண்ணே இசைப்பதுபோலும்! ஏன் இங்கு வந்து அழுகிறாள் இவள்? குழந்தையை இழந்திருக்கவேண்டும்; அன்றேல், கணவனைப் பிரிந்த கடுந்துயர் பொறாது வந்திருக்க

வேண்டும். சற்று விலகி யிருந்து எப்படி அழுகிருள் என்று பார்க்கலாம்:—

"வெவ்வாய் ஓரி முழவாக விளிந்தார் ஈமம் விளக்காக
ஒவ்வாச் சுடுகாட்(டு)உயரரங்கின் நிழல்போல் நுடங்கிப் பேயாட
எவ்வாய் மருங்கும் இருந்திரங்கிக் கூகை குழறிப் பாராட்ட
இவ்வா ருகிப் பிறப்பதோ இதுவோ மன்னர்க் கியல்வேந்தே."

ஒரு குழவியின் அழுகுரலும் கேட்கிறது. என்ன இது! அக் குழவி பிறந்ததற்கு இப்பெண் அழுவதுபோல் தோன்று கிறதே!! மன்னர் மரபைச் சேர்ந்தது அம்மகவு என்றும் தோன்றுகிறதே!!! என்ன புதுமை! ஒருகால் "மணப்பேன்" என்று சொல்லிக் கைவிட்ட ஒரு காமுகனின் கடுஞ்செயலால் இஃது இங்ஙனம் நிகழ்ந்ததோ? அங்கிருந்து வருகின்றஅவரைக் கேட்டுப் பார்க்கலாம். பார்த்தால் புலவர் போற்றுேற்றுகிருர். அவர் கூறுகின்றது இது:—ஐய! அப்பெண் ஓர் அரசியாயிருந் தவள். பெண்டிர் பலரையும் திருவாலும் உருவாலும் வென் றமையால், விஜயை எனப் பெயர் படைத்தவள். அவள் கணவன் சச்சந்தன் என்பான், ஏமாங்கத நாட்டு அரசன். ஆற் றலும் வீரமுஞ் செறிந்தவன் எனினும், இப்பெண்பால் வைத்த கழிகாதலால் மண்ணை ஒருவன்பால் ஒப்படைக்க, அவன் வஞ் சித்து இவனையே கொன்றனன். இறந்துபடு முன்னர், வருகின்ற தீமைக்கு அஞ்சி, இக்கர்ப்பிணியை மயிற்பொறியில்வைத்து வெளியிடத்தே கணவன் அனுப்ப, இவள் சோர்ந்து வந்து இம் மயானத்து இக்கோலத்தில் இருக்க நேரிட்டது. அரசன் இருந் தால் எத்துணைச் சிறப்புச் செய்வன் இம்மகவு காரணமாக, எத் துணைக் கொடை புரிவன் என்றெல்லாம் நினைத்து இப்பெண் ஏங்குகின்றுள். அரசமாளிகையிற் பற்பலர் சூழ்ந்து, இன்னியம் இயம்ப, கணிகள் ஜாதகம் கணிப்பப் பொற்றட்டில் பிறக்க வேண்டிய இப்புண்ணியன் சுடுகாடாகிய பாயில், அருகே ஒரு வரும் இல்லாது பிறக்க நேரிட்டதே என்று கவல்கிருள் இவள். அன்றெல்லாம் இவள் வானுலகவின்பத்தை யொத்த பேரின்ப மெல்லாம் அரசனது அணிதிகழ் கோயிலிலிருந்து துய்த்தவள். அன்றெல்லாம், சிலதியர் பலர் சூழப் பல நட்சத்திரத்தின்

நடுவே செல்லுந் திங்களைப்போலத் தலைமையொடும் பெருமையொடுஞ் சென்றவள்; இன்று, தன்னந் தனியாகப் பேயும் பிணமும் மலிந்த இச்சுடுகாட்டில், கேட்பாரற்ற இவ்விடத்தில் இவள் இத்துயருறுவதைக்கண்டால், பாவஞ்செய்தவர் துயருறுவரென நூல்கள் சொல்வதைக் கேட்டிருப்பவரெல்லாம் பிரத்தியட்சப்பிரமாணத்தால் தன்னைக்கண்டு அறிக என இவள் கூறுவதுபோல் தோன்றுகிறது. இந்தக் கருத்தை உடனே ஒரு செய்யுளிலே அமைத்துப் பாடிக்கொண்டே போய்விட்டார் அப்புலவர் திருத்தக்கதேவர். அதனைச் சீவக சிந்தாமணியிற் காணலாம்:—

"உண்டென உரையிற் கேட்பார் உயிருறு பாவம் எல்லாம்
கண்டினித் தெளிக என்று காட்டுவாள் போல ஆகி
விண்டொட நிவந்த கோயில் விண்ணவர் மகளிற் சென்றாள்
வெண்டலை பயின்ற காட்டுள் விளங்கிழை தமிய ளானாள்.

அப்பால், ஒரு தொண்டு கிழவர் கோலை கண்ணுய்க் குனிந்து வருகிறார்; நரையும் திரையுமாயுள்ள அப்பெரியார் ஏதோ ஒன்று சொல்ல நினைக்கிறார்போல் காணப்படுகிறார். ஆயினும், சொல் வரவில்லை. ஏன்? இருமல் இடையே குறுக்கிடுகிறது. அது அடங்கினதும், விட்டுவிட்டு அவர் கூறும் சில சொற்கள் நம்மால் அறியப்படுகின்றன. அவற்றிலிருந்து, அவர் இளமையில் விளையாட்டுப் பதுமைகளுக்குப் பூச்சூட்டி மகிழ்ந்தாரென்றும், குறுமகளிரொடு கபடமின்றி ஆடித்திரிந்து அலைந்தாரென்றும், உயர்ந்த மரத்திலிருந்து நீர்த்தடாகங்களில் குதித்துத் துடுமென ஒலியெழுப்பிக் கரையிலிருந்தவரை மருள வைத்தார் என்றும், உள்ளே மூழ்கி மணலைக்கையில் எடுத்துப் பிறர்க்குக் காட்டினாரென்றும் அறிகிறோம். அவர் இப்பொழுது அந்நாட்களை நினைக்கிறார்; நினைத்து வருந்துகிறார். என்னே! இளமையிற் செய்ததை முதுமையிற் செய்ய முடியவில்லையே! என நினைந்து இளிவரலுறுகின்றார்.

இத் தொடித்தலை விழுத் தண்டினாருக்கு நமது அநுதாபத்தைத் தெரிவித்துக்கொண்டு மேல்செல்வோம். பேரரசனும் பல்லாண்டு ஆண்டவனும் நரைகண்டு துறக்கலுற்றவனும் ஆகிய

தசரதன் "இறக்க வேண்டும் என்னும் மெய்ம்மையை மறத்தவிற் பிறிதொரு பெருங்கேடுண்டோ? துறவென்னும் தெப்பம் துணையாகப் பிறவிப் பெருங்கடலைக் கடந்து முத்திக்கரையை அடைய எண்ணியுள்ளேன். ஆதலால் இராமனுக்கு அரசினை நல்கி மாதவம் புரிய விரும்புகின்றேன். நும் கருத்து யாதோ?" என அவையினரை வினவுகின்றான். இராமன் ஆள்வன் என்பதால் ஒருசார் இன்பமும், தசரதன் துறப்பன் என்பதால் ஒருசார் துன்பமும் அடைந்து அவையினர் மயங்கும் தறுவாயில், வசிஷ்ட முனிவர் "வீர! இராமன் உன் உயிர்க்கு இனியனாய் இருத்தல் போலவே மன்னுயிர்க்கெல்லாம் இனியனாய் உளன். கற்றவரும், மற்றவரும் அவனைத் தாம் தாம் உண்ணும் நீரினும், தத்தம் உயிரினும் சிறந்தவனாக மதித்து உவகை யுறுகின்றார்கள்" என்றெடுத்து இயம்புகின்றார். அப்பொழுது தசரதனுக்கு உண்டாகும் மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. இராமனைப் பெற்ற பொழுது உற்ற உவகையினும் பெரியதோர் உவகை உண்டாகிறது. அறுபதினாயிரம் ஆண்டு தன்னுலகைக் காத்துப் பகையை ஒடுக்கிப் பிற பல இன்பங்களெல்லாம் நிறையப்பெற்றிருந்தும், நன் மகவில்லாக்குறை ஒன்று தீர்த்துக் கொள்ளப் பெரியதோர் புத்திரகாமேட்டியாகம் அருஞ்செலவிற் செய்து, தசரதன் இராமனைப் பிள்ளையாகப் பெற்றனன் என்றால், பெற்ற ஞான்று இருந்திருக்கக் கூடிய இன்பத்தை அளவிட்டுக் கூற வல்லார் எவர்? மகன் பிறந்தான் எனக் கேட்டவுடனே அங்கிருந்த தோழியரும் ஆடினர் பாடினர் ஓடினர் உவகையால் என்றால், பெற்றதாயும் தந்தையும் எத்துணை மகிழ்ச்சி அடைந்திருக்கவேண்டும்? நிதிநிறை சாலைகளின் தாளை விலக்கி, நிதியனைத்தும் வறிஞரெல்லாம் வாரிக்கொள்க எனப் பறையறைவித்தான் பாருடைத் தசரதன் என்றால், அவனது உவகை எத்தகைத்தாய் இருந்திருக்கவேண்டும்? அவ்வுவகையினும் மிக்கதோர் உவகை தோன்றலுங்கூடும் என்று எண்ணின், அது அப்புதல்வனது மணவணி காணும் திருநாளில் உண்டாகத் தக்கதாயிருத்தல்வேண்டும். அத்திருநாளிலும், பிறந்த திருநாளிலும் பெற்ற பேரின்பத்தினும் பெரியதோர் இன்பம் தசரதனுக்கு

வசிஷ்டர் மொழியில் உண்டாயிற்று எனக் கம்பர் வாக்கால் அறிகிறோம்:—

"மற்றவன் சொன்ன வாசகங் கேட்டலும் மகனைப்
பெற்ற அன்றினும்(....)பெரியதோர் உவகையன் ஆனான்."

காரணம் யாது? மகன் பிறந்தான் என்பதினும், அறிவுடையனான் என்பதினும், நற்குணங்கள் நிரம்பினன் எனச்சான்றோராற் சொல்லப்படுதல் சிறப்புடைத்து. தன்மகன் சால்புடையன் எனத் தானறிந்திருந்தாலும், பிறர் வாயிலாகக் கேட்டல் இனிது. அதனினும் இனிது சான்றோன் எனச் சான்றோரால் தன்மகன் எண்ணப்படுதலைக் கேட்டல். இம்மகிழ்ச்சி, பெற்ற தாய்க்கும் தந்தைக்கும் ஒக்கும். "ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்—சான்றோன் எனக் கேட்டதாய்" எனத் திருவள்ளுவர் கூறியதில் உள்ள தாயென்னும் சொல், ஒழிந்த தன்னினமாய தந்தையென்னும் சொல்லையும் உட்கொண்டது. எனவே பெற்ற அன்றினும், மகன் நல்லவன் எனப் பெரியோராற் சொல்லப்படும் இன்று தோன்றும் உவகை பெரிது பெரிது.

## தியாகராசர் கழிநெடில்

தமிழ்ப்பேராசிரியர். திரு. L. உலகநாத பிள்ளையவர்கள்

இது, திருவாரூரின்கண் திருக்கோயில் கொண்டெழுந்தருளிய தியாகராசர் தோத்திரம். கழிநெடில் என்பது ஐந்து சீர்க்கு மேற்பட்ட அடியானிகழ்வது. சொற்சுவையும் பொருளமைதியும் உள்ள இத்தோத்திரத்தை இயற்றிய ஆசிரியரைக் கமலை ஞானப்பிரகாசர் என்பர். போதியசான்று கிடைத்திலது.

தண்ணார்மதியும் பகிரதியும் சாந்தமெழுது திருத்தோடுந்
தவிராதணியும் மாலிகையுந் [1] தம்போர்கொடுத்த கரைத்ததூசும்
பண்ணார் [2] தவளப்பாளிதமும் பதுமராகப் பலபணியும்
பசும்பொன் குயிற்றுநவரத்னப் பணிவாங்கதமு மணிச்சிலம்பு

1. தியாக விநோதனென்னும் திருநாமத்தை எழுதிய சேலை.
2. தவளப்பாளிதம் பச்சைக்கர்ப்பூரம்.

மெண் [3]ணுடரவக் கிண்கிணியுமிழைத்த சுடர்ப்பூ வாசிகையு
மிமைத்த [4]வீரகண்டயமு மிணங்குமிடங்க டொறுந்தரித்துக்
கண்ணுரமுத மயலிருக்கக் கனகவரியா சனத்திருக்குங்
கருணைநிதியை யாரூரிற்கண்டார் பிறவிக் காணுரே. (க)

திங்களெனவெண் குடைநிழற்றச் சிங்காதனத்தி லினிதேறித்
தேவியிருக்க மகனிற்கச் செழித்தகவரிப் பணிமாறத்
தங்கத்தகளி விளக்கேந்தித் தளருமிடையா ரணிநெருங்கச்
சங்குபடக மெக்காளந்தாளஞ் சின்னம் துடிமுழவம்
பொங்குகடலி னெலியடங்கப் பிறவின்னியங்கள் மழைகாட்டப்
புவனுதிபர்கள் திசைபோற்ற புரைதீர்பருதிக் கடலாடிக்
கங்குலுதவுங் [5]திருவந்திக் காப்புக்கண்டு வீற்றிருக்குங்
கருணைநிதியை யாரூரிற்கண்டார் பிறவிக் காணுரே. (உ)

மோனவிரதந் திசைகடொறும் மொய்த்தோர்பிடிக்க வோவியம்
முத்தநகையார் புடைசூழ முறையேநந்தி கணம்பரவ [போல்
நானநறிய [6]பசுந்தென்றல் நடக்குந்திருச்சா லகத்திடையே
நாலுமறையு மொருமூவர் நாதத்தமிழும் புறத்தமிழும்
பானல்விழியார் சங்கீதப் பாட்டும் பற்றுமணியாழும்
பலதந்திரிகொள் வீணைமுதல் பஞ்சக்கருவி கஞ்சமுறக்
கானமழலை தவழ்ந்துகுழைக் காதுநிறைய வீற்றிருக்குங்
கருணைநிதியை யாரூரிற்கண்டார் பிறவிக் காணுரே. (ஙூ)

விதித்தநாளில் வருந்தேவர் மிடைந்ததிருக்கா வணத்தில்நின்று
வேளைதெரிய வேத்திரக்கை மேலோரருளிப் பாடென்ன
பதித்தமணி மாலிகைமுன்றிற் பரவிநெருங்கு மவரவர்க்கு
பணித்தமுறையே முடித்தூசும் பழுக்காயிலையும் மடிநீட்டி
மதித்தவகத்து ளடியாரும் புறத்து ளடியாருமருவ
வாழுங்கோயின் முதன்மையரும் மற்றுளோரும் புடைசூழக்
கதித்த வீரசோழியத்திற் கவரியசைய வீற்றிருக்கும்
கருணைநிதியை யாரூரிற்கண்டார் பிறவிக் காணுரே. (ச)

---

3. ஆடரவக்கிண்கிணி தியாகர் திருவடிகளிலணிவது.
4. வீரகண்டையம்-தியாகரின் வாட்படை.
5. திருவந்திக்காப்பு—மாலைக்காலத்தில் தியாகருக்கு நடைபெறும் அலங்காரம். இத்தரிசனம் மிக்க விசேடமுடைத்தென்பர்.
6. தென்றற்காற்று திருமேனியில் வீசுமாறு சாளரத்தருகில் வீற்றிருக்கச்செய்து வழிபடுதல்.

பாந்தள்நெளியப் பாரசையப் பதினுலகு மொருங்கிண்டப்
பரமர்முழவ மிசைந்தேங்கப் பலமாமறையும் புகழ்பாட
மாந்தாரவென் றெடுத்தவொலி வானம்பிளந்து திசைதூர்க்க
வகுத்தகனக மதிலெனவே வளைந்ததிரைக்குள் வந்தேறித்
தீந்தந்திமிதோ திமிதெனவே திக்குநெருங்க வசைந்தாடிச்
செம்பொ னடிக்காயிரமுதவி செருக்கிபவனி விளையாடிக்
கந்தாமணிமா மண்டபத்திற் கவரியசைய வீற்றிருக்கும்
கருணாநிதியை யாரூரிற் கண்டார் பிறவிக்காணாரே. (ரு)

வழுத்தவிரவு செனங்களுக்கு வரைசூழ்புவனம் சிறிதெனவே
வந்துவந்து மணிமாட மறுகுதெற்றி யாடரங்கம்
பழுத்தசோலை யெங்கெங்கும் பரவிநின்றார் நின்றபடி
பணியப்பரவப் பங்குனியைப் பலரும்புகழப் பணையார்ப்ப
அழுத்துமகுட மழைகிழிக்க ஆடுங்கொடிகள் திசையளக்க
அசையுமசையா தெனநடக்க ஆழிபுரளுந் தொழுஞ்சேடன்
கழுத்துநெரிய வரும்பெரிய கனகத்தேரி லுலாப்போதும்
கருணாநிதியை யாரூரிற்கண்டார் பிறவிக் காணாரே (சு)

சுடருமந்தா கினிச்சடையிற் சுவறப்பெருமைக் கறுநதியும்
சுளித்துவேணி நனைத்திருக்குந் தொன்னீர்க்குணர்ந்து பொருவபோ
லுடையபஞ்சக் குரோசத்தி னுள்ளேயடங்காப் பழமலையை
யுருட்டியினிமாங் கனிகனிந்தே யூறுமமுதும் பசுந்தேனும்
வடிகொளினிய சுவைப்பாலும் மதுரத்தயிரும் நறுநெய்யும்
வழிபாளிதச் சந்தனச்சேறு மருவுபுனலுங் கவித்தோடிக்
கடல்வாய்மடுப்ப வபிஷேகம் கண்டுகனகா சனத்திருக்கும்
கருணாநிதியை யாரூரிற் கண்டார் பிறவிக்காணாரே. (எ)

பாலுக்கினிய மொழிகாணப் பரமானந்தச் சுடர்வீசப்
பகுத்துவகுத்த பல்லுயிருட் பலமாபரிசு வெளிதோன்ற
நாலுக்கிசைந்த மறைபரவ நதியுமதியு மிடைததும்ப
நகைசேர்பாடகக் குண்டலந்தவழ நாதமணிக் கிண்கிணியசைய
மாலுக்குரிய படகியம்ப மதங்கமஞ்சு முக்குடங்கள்
வட்டத்துடனே யிசைந்தேங்க மழலைமுழவஞ் சதிகாட்டக்
காலுக்கிசைய [1]வசபைநடம் காட்டிக்கனகா சனத்திருக்கும்
கருணாநிதியை யாரூரிற் கண்டார் பிறவிக்காணாரே. (அ)

---

1. வசபாநடம் ஓர்வகை நடனம் தியாகர்க்குரியது.

பொருநீர்க்கடல்கள் புகுந்தாலும் போதாதள்ளித் தாவவெனப்
போந்தோர் புற்றின்குட திசையிற்பொய்கை படிந்துபடிந்தேறி
வருமூவினையின் வேர்சாய வந்துவந்து பணிந்தேதம்
மற்றப்போய தேவரெல்லாம் மகுடமிழைய நெருக்குண்டு
பெருமாநந்தி கணம்புடைக்கும் பிரம்பினடிகொண்டய லொதுங்
பேரானந்த மூலகடங்கப் பெரும்பங்கு னியுத்தரநாளில் [கப்
கருதாடரவக் கிண்கிணிக்கால் காட்டியரவா சனத்திருக்கும்
கருணாநிதியை யாரூரிற் கண்டார் பிறவிக்காணரே. (கூ)

வாணாளிரந்து மவனிரங்க மலரோன்விதியா திளைப்பாற
வருத்தவகுத்த பல்லுயிருள் மருவும்பாவக் கதிசேரப்
பூணார்முலையார் பல்லாண்டுபோற்றி யிசைப்பப் பதஞ்சலியும்
புலியும்பசுவும் முனிவருடன் போந்துபணிந்து பணிந்தேகச்
சேணாடமரர் புடைசூழச் சிலையார்திருவா திரைநாளிற்
றிருவாசகப்பூந் தேன்பருகிச் செந்தாமரைக் கண்ணனுமின்னங்
காணாதரவக் கிண்கிணிக்கால் காட்டியரியா சனத்திருக்குங்
கருணாநிதியை யாரூரிற் கண்டார்பிறவிக் காணாரே. (ω)

முற்றிற்று.

---

# தியாகராஜர் பள்ளேசல்

இது, தமிழ்ப்பிரபந்தங்களுள் ஒன்று. கடவுள்வணக்கமும், மூத்தபள்ளி, இளையபள்ளி, பள்ளன் இவர்களின் பெருமையும், மழைநீர் பெருகி ஐவகை நிலங்களிற்செல்லும் வனப்பும், அந் நிலங்களின் கருப்பொருள்களும் எடுத்துரைத்தலும், மணிமுத் தாறு பெருக்கெடுத்து வருதலும் மீன்வகை கூறலும் குயிற் கூவல் கேட்டலும், இடையிடையே அகப்பொருட்டுறைகளை இனிதாக எடுத்துரைத்தலும், பண்ணைத்தலைவன் வரவு, அவனைப்

---

பங்குனி யுத்தரமும்—திருவாதிரையும்—பாதசேவைக்குரியநாட்கள்.

ஆடவக்கிண்கிணிக்கால்—ஆடரவமும் கிண்கிணியும் அணிந்ததிருவடி யென்று பொருள் கொள்க.

பள்ளத்திகள் கண்டுதொழுதல், அவன் பள்ளனைப் பண்ணைச் செயல் வினவலும், பள்ளன் அதனையும், எருத்துமாடு, ஏர்க்கால், மேழி, கொழு, நெல்வகைகளையும் எடுத்துரைத்தலும், பண்ணைக் காரன் பள்ளனை விதை தெளிக்கச் சொல்லலும், நடவு நட பள்ளத்திகளை அழைத்தலும், பள்ளத்திகள் ஒருவரையொருவர் ஏசுதலும் என்னும் இவ்வுறுப்புகளுறப் பாட்டுடைத் தலைவர் தியாகராஜரின்பெருமை ஆங்காங்குதோன்றச், சிந்து, விருத்தம், வெண்பா, கலிப்பா, சந்தப்பா, கலித்துறை விரவிவர பாடப்படுவது. இதனை உழத்திப்பாட்டு எனவும் வழங்குவர். மூத்த பள்ளத்தியை வன்மீகப்பள்ளி எனவும், இளைய பள்ளத்தியைச் சீரங்கப்பள்ளி எனவும் கூறுவர். இவர்களின் ஏசல் வாயிலாகக் கடவுளரின் செய்கை பல தெளியலாம். இதனை இயற்றியவர் **கமலை ஞானப்பிரகாசர்** என்பவர். இதுகாறும் அச்சிடப்பெறாத நூல்களில் இஃது ஒன்றாகும்.



## கடவுள் வணக்கம்

### காப்பு வெண்பா

சீர்பரவு மாரூர்த் தியாகற்குச் செந்தமிழாற்
பார்புகழும் பள்ளேசல் பாடவே—வார்மருவு
கொங்கை யுமையீன்ற குஞ்சரனும் வேலவனுங்
கங்கை சரசோதியுமே காப்பு



## சந்த விருத்தம்

### வாதாவி விநாயகர் வணக்கம்

பூமாதொரு மாதவ மினிதுறை நீராடிய வாவியி னறைகமழ்
பூகாடவி மேவிய பொழில்களு மெழில் வீறப்
பாமாதிசை வீறிய புகழ்பயி லாரூர்தி யாகர்த மனமகிழ்
பாவானபள் **ளேசலி** னிசை வகை பலகூற

ஏமாசல மாகிய புயமிசை யாகாச மளாவிய பணமணி
ஏகாசம தாமென வணிதரு மியலாளன்
மாமால்மரு கேசன் முனம்வரு போர்மாமத வாரண முகமுள
வாதாவி விஞயக னிருபத மறவேனே (1)

## முருகர் வணக்கம்

மேவு மகண்டப் பெருமாள்புகழ் வீதிவிடங்கப் பெருமாள்திரை
வேலைவிடம்புத் தமுதாமென விரும்பிய பெருமாள்
தேவரக ண்டப்பெருமாள்கறை தாவிய கண்டப்பெருமாள்மிசை
சீர்பெற வுகந்தபள் ளேசலி னிசைபாட
வாவி நிறம்பொற் கலாப மயூர மெனுஞ்சொற் பரிமீதினில்
வானவர் தம்பொற் பதிகாவல் செய் வடிவேலன்
ஆவ லுடன்கைத் தழையேகொடு வேடுவர் மங்கைக் குயர் காமுகன்
ஆறு முகன்பொற் பதநாவினில் நவில்வேனே (2)

## கமலாலய நாயகி வணக்கம்

சனகாதியர் சேவடியிணைதொழ வடதாருவி னீழலி லருமறை
தனையோதிய தேசிக ரிமையர் தமையாள்வார்
அனமெனமுன் னுடுதலரியவ ரருளாளர் தியாகர்தம் மனமகி
ழுடைவானபள் ளேசலி னிசைவகை நசைகூர
இனகொடியி னேர்தரு மெழிலினள் திரிசூலி மனோன்மணி திரிபுரை
இமயாசல மேவிய வுமையவ ளுமையாள்வாள்
கனகாசல மாகிய முலையின ளருமாதவமாகிய நிலையினள்
கமலாலய நாயகி யிருபத மறவேனே (3)

## கலிப்பா

தாளுஞ் சிலம்புந் தடவரவக் கிண்கிணியுந்
தோளுஞ் செவ்வந்தித் தொடையுமற வாதருளீர்
மூளுங் கருணை முகத்தா லடியவரை
யாளும் பெருமாள்தென் னுரூர்ப் பெருமாளே (4)

[வன்மீகப்பள்ளி, சீரங்கப்பள்ளிகளுடன் பள்ளன் வருகையும் அவர்களின் பெருமையும் கூறுதல்.]

சிந்து

போரங்க மானகலை மாரன்கை மேவுசிலை
போலுந் திருநுதலில் வெயர் வரும்பக்
கூரங்க வேல்விழிகள் நேரங்க மானதொரு
குற்றிடைக் கொடி துவண்டு குலைந்தலைய
தாரங்க மானகுழற் காரங்க மானவண்டு
தந்தனு தனனு வென்று தமிழ்பாட
வாரங்க மானகொங்கைச் சீரங்கப் பள்ளியுடன்
வன்மீக நாதப் பள்ளன் தோன்றினனே (5)

கச்சைகட்டிச் சுள்ளினேடு கள்ளு மிகப்பருகிக்
களித்தேப்ப மிட்டுவெறிக் கண்கள் சிவப்ப
மெச்சுமிள நகைசெய்து மீசைதன்னை முறுக்கி
வெண்ணீறு தனைமுக மீதி லணிந்து
பச்சைமணித் தொண்டுகட்டிப் பவளத் தாவடங்கட்டிப்
பருக்கச் சேந்திருக்கத் தொப்பார முங்கட்டி
வச்சிரமாமணிக் கொட்டுமணித் தோளின் மிசைத்தோன்ற
வன்மீக நாதப் பள்ளன் தோன்றினனே (6)

பைங்கமலத் திருமுகம் வெயர்வுறப் பாதமலர் பரிபுர மொலியெழப்
படைவேல்விழிக் கடைபோர் செய்மலரங் குழையசைய
வங்கைமலர் சரிவளை யசைதர வணிமுறுவல் சிறுநகை யொளிதர
வளகாடவி நெகிழ்வுற வளியின மிசைபாடக்
கங்கைதனைச் சடையணிபெருமாள் காலனைக்காலா லடர்ந்திடுபெருமான்
கணைவேளுடல் பொடிபட வெரிசெய் கண்ணுதற்பெருமாள்
செங்கமலைப் பதியுறைபெருமாள் தேவாகண்டப் பெருமாள்தன்
திருநாமம் பாடியாடும் பள்ளத்திகள் தோன்றினரே (7)

குஞ்சரமேய துணைமுலை யசையக் கோர்வை மணித்திரள் புரளக்
கோலநுதற் சிந்தூ மழகுறக் கொடியிடைதுவள
அஞ்சனமேய கயல்விழிபுரள வமுதமொழிக் குமுதமலர்ந்திட
அணியுமணிப் பணிபலபல வசைவுற வளிக்குழல் நெகிழக்

கஞ்சமலர்க்கொடி படர்பெருமாள் காயாமலர் வண்ணப்பெருமாள்
காவேரியின் நடுவணைமிசை கண்டுயில் பெருமாள்
செஞ்சிலைவேள் தனையருள்பெருமாள் திருவரங்கப்பெருமாள் பெருமைத்
திருநாமங்கள் பாடியாடும் பள்ளத்திகள் தோன்றினரே (8)

## வெண்பா

விரவு சிலைமதவேள் வெங்காலனென்னு
மிரவுமிக முப்பதுக மென்னும்—பரவு
கறைக்கண்ட னேகயலைக் கண்ணுதலை யென்னும்
பிறைக்கண்ட நேருநுதற் பெண். (9)

பொன்பரப்பிய திருவீதியிலே கணைபரப்பிய சிலைவேள் நிலைதரும் புகழ்
[பரப்பிய கமலாலயமெனும் புரியுறைபெருமாள்
அன்பர்க்கெளிதாகிய பெருமாள் அருமைப்பெருமாள் கலைமானுறை
[யங்கைப் பெருமாள் மலைமானுறை யாகப்பெருமாள்
தென்புறத்திளந் தென்றலிழைத்திடுந் திருச்சாலக வரிசைப்பெருமாள்
[சிங்காசன மழகியபெருமாள் தியாகப் பெருமாள்
மின்பரப்பிய சடைமுடிப் பெருமாள் வீதிவிடங்கப்பெருமாள்
[தன்றிரு நாமம் பாடியாடும் பள்ளிநானே (10)

அண்டர்மனைக் கொடியிடை மடவியர் அளையத்தயிர்ப்படு மழகியமெய்க்
[கலைபிடித்தழுதிடு திருமால்
மண்டலமுண் டெழுவரை யுண்டெழு புவனமுண்டொரு வடபத்திர
[மிசைத்துயில் மதலையின் வடிவுள திருமால்
கண்டகர வெஞ்சமர்பொரு நிருதனையொருபது சிரமிருபது கரமறக்
[காதூடணர் முடிதூளெழ வொருகணை தொடு திருமால்
தெண்டிரைவெண் சங்குமுழங்கிய திருக்காவேரி வளைந்திட வளர்ந்தருள்
[திருவரங்கத்திருமால் திருநாமம் பாடியாடும் பள்ளிநானே (11)

## கட்டளைக் கலிப்பா

காலமுமந்திப் படைபொருதல் பாரீர் காலமறிந்து களபமுலை சேரீர்
சீலமறிந்து பணிவிடைசெய் யேனே சேவடிவந்து தினமும் வருடேனே
ஒலிடுவண்டு குழுறுகுழ லாரே யோசை முழங்கு குயிலின் மொழியாரே
வேலையடர்ந்த கலகவிழி யாரே வீதிவிடங்கர் கமலை யனையாரே (12)

வேறு

அன்பர்க் கெளிதாகிய பெருமாள் திருவந்திக் காப்பழகிய பெருமாள்
ஆடுதண்டினில் தோடசைந்திட அசைந்தாடும் பெருமாள்
பைம்பொற் றேரழகிய பெருமாள் செவ்வந்தித் தொடையணி பெருமாள்
பாலொத்திடு மொழியாளுறையும் பாகப் பெருமாள்
கம்பிக்கா தழகியபெருமாள் கனக வசந்தப் பெருமாள்உயர்
கங்காளப் பெருமான் தேவாகண்டப் பெருமாள்
செம்பொற் சிங்காதன மழகிய பெருமாள் தியாக விநோதப் பெருமாள்தன்
திருநாமம் பாடியாடும் பள்ளி நாமே (13)

முண்டக நாபிதனில் நான்முகவண் டிருந்து மூலமறை மொழி முழங்க
[வைத்தோன்
அண்டர் மகிழ்ந்திடவே மோகினியாகி முனம் ஆரமுதம் பகர்ந்த அன்புடை
[யோன்
வண்டெனவே யுகந்து வாவியில் வன்கழுவில் மாயமுட னுறைந்த மாய
[வனர்
தெண்டிரை வாவிசூழும் சீரங்க ராசனர்தம் திருநாமம் பாடியாடும்
[பள்ளிநாமே (14)

கடவுட் பரவல்

குயிலுக்கு நீணிலா வெயிலுக்கு மாரவேள் கொடுமைக்கு வாடலாமோ
மயிலுற்ற சாயலாள் மயலுற்றிடாமலே மருமத்தி லாளொணுதோ
சயிலுற்ற நாதரே யரவுற்ற பாதரே தமிழ்விட்ட தூதனரே
கயிலைத் தியாகரே கனகத் தியாகரே கமலைத் தியாகனரே (15)

மேகம் குடகில் பொழிதல்

குறிஞ்சி நிலம்

கனத்தமேகக் குலங்கள் கூடிக் கலங்கி வேலை விலங்கவே
கருகிய நீரைப்பருகி வானத் தருகினேறிப் பெருகவே
வனத்துமிகுந்தகுடகிற்பொழிந்துவழிந்துகரையிலெழுந்துமேல்
வரகுடன் பயில் தேக்குமாரமும் நூக்கியே கரைதாக்கியே
யினத்திற் குறவர் புனத்திலிதணும் எடுத்தகுடிலு மிதக்கவே
யிரைந்து குமுறிவிரைந்து மருவியிருவிக் குருவிவெருவவே
அனத்தை நேர்தரு குறத்திகாதலி லழுந்துவேள்பதம் வழுத்தியே
அவருங்குறிஞ்சி மலருமருவி யதிர்ந்துபாலை யெதிர்ந்ததே()

(தொடரும்.)

உ

# பின்னங்குடிச் சுப்பிரமணிய சாத்திரியார் தொல்காப்பியச் சொல்லதிகாரக் குறிப்புரை மறுப்பின் மேல் செந்தமிழ்ப்பத்திராசிரியர் திரு நாராயணையங்கார் எழுப்பிய தடையும் அதற்கு விடையும்

திரு. ம. நா. சோமசுந்தரம் பிள்ளை அவர்கள்,
*தமிழ்ப்புலவர், மன்னார்குடி.*

(*முற்றொடர்ச்சி துணர்* 13. *மலர்* 1. *பக்கம்* 21.)

*வினையெச்ச முடிபுபற்றிப்* பரிமேலழகர் *உரைக் குறிப்புக்கள் (குறள் 886) 'அரம்பொருத பொன்போலத்தேயும் உரம் பொருது உட்பகையுற்றகுடி' உட்பகையால் பொரப்பட்டுக்குடி உரம்தேயும் அரம்பொருத பொன்போல் எ-று. பொருது என்னும் செயப்பாட்டு வினையெச்சம் தேயும் என்னும் வினை கொண்டது தேய்தல் உரத்தின் தொழிலாயினும் குடிமேல் ஏற்றுதலின் வினைமுதல் வினையாயிற்று.*

(ஷை-938) *'பொருள் கெடுத்துப் பொய்மேற் கொளீஇ அருள்கெடுத்து—அல்லல் உழப்பிக்கும் சூது.' 'பொருள் கொடுத்து' என்பது பாடமாயின், அவ்வெச்சத்திற்கு முடிபு மேற்கொளீஇ என்புழி மேற்கோடல் ஆகிய வினைமுதல் வினை.*

(ஷை-643) *'கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழிவதாம் சொல்.' அவாய் என்னும் செய்தெனெச்சம் மொழிவது என்னும் செயப்பாட்டுவினை கொண்டது.*

(ஷை-463) *'ஆக்கங்கருதி முதலிழக்கும் செய்வினை யூக்கார் அறிவுடையார்.' கருதியென்னும் வினையெச்சம் இழக்கும் என்னும் பெயரெச்ச வினைகொண்டது.*

(ஷை-1168) *'மன்னுயிரெல்லாம் துயிற்றி யளித்திரா என்னல்லதில்லை துணை.' துயிற்று—துயிற்றுதலான். எனத் திரிந்து நின்ற வினையெச்சம் என்னையன்றி வேறு துணையுடைத் தாயிற்றில்லையென அவாய் நிலையான் வந்த உடைத்தாதலோடு முடிந்தது.*

(ஷை-868) 'குணமிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்—கினனிலனா மேமாப் புடைத்து.' என்னும் செய்தெனெச்சம் உடையவென வந்த பெயரெச்சக் குறிப்புக்கொண்டது.

(ஷை-815) 'செய்தேமஞ் சாராச்சிறியவர் புன்கேண்மை எய்தலின் எய்தாமை நன்று.' சாராத என்னும் பெயரெச்சம் கேண்மை யென்னும் பெயர் கொண்டது. சிறியவர் என்பதனைக் கொள்ளின் செய்து என்பது நின்று வற்றும்.

(ஷை-944) 'அற்றதறிந்து கடைப்பிடித்து மாறல்ல-துய்க்க துவரப்பசித்து' பசித்தல் வினை ஈண்டு உடையான்மேல் நின்றது.

(ஷை-93) 'முகத்தானமர்ந்தினிது நோக்கி அகத்தானும் இன்சொலினதே அறம்.' நோக்கியென்னும் வினையெச்சம். இன்சொல் என அடையடுத்து நின்ற முதனிலைத்தொழிற்பெயர் கொண்டது.

(ஷை-352) 'இருணீங்கி இன்பம் பயக்கும் மருணீங்கி மாசறு காட்சியவர்க்கு.' மருணீங்கியென்னும் வினையெச்சம் காட்சியவர் என்னும் குறிப்பு வினைப்பெயர் கொண்டது.

(ஷை-604) 'குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து மாண்ட உஞற்றிலவர்க்கு.' மடிந்து எனத் திரிந்து நின்ற வினையெச்சம் இலவர் என்னும் குறிப்பு வினைப்பெயர் கொண்டது. **செந்தமிழ்ப் பத்திராசிரியர்** இலவர் என்பது எதிர்மறை வினைப்பெயர் என்றும், இல் என்பது எதிர்மறைவினை முதனிலை யென்றும் கூறினர். பரிமேலழகர் இலவர் என்றது குறிப்பு வினைப்பெயர் என்றாரேயன்றி எதிர்மறை வினையென்றாரிலர். எதிர்மறை வினைக்கு முதனிலையும் தனியாக வேண்டினாரிலர். வினை முதனிலையோடு எதிர்மறை விகுதி புணர்ந்து எதிர்மறை வினையாவதன்றி, எதிர்மறை வினையெனத் தனியே கிடையாது. இது **சேனாவரையர்** உரையானும் உணர்க. இவ்விலக்கணம் முன்னமே விளக்கப்பட்டது.

(பரிபாடல்-3) 'திணிநிலம் கடந்தக்கால் திரிந்தயர்ந் தகன் றோடி நின்னஞ்சிக் கடற்பாய்ந்த-அன்னவர்.' திரிந்து அயர்ந்து அஞ்சி அகன்று ஓடியென்னும் செய்தெனெச்சங்கள் வாய்ந்த என்னும் வினைமுதல் வினைகொண்டன.

(ஷை-13) 'இலங்கொளி மருப்பிற் களிறுமாகி மூவுருவாகிய தலைபிரி யொருவனை.' ஆகியென்னும் வினையெச்சம் ஆகிய என்னும் பெயரெச்சத்து ஆதலோடு முடிந்தது.

(ஷை-17) 'தேம்படு மலர்குழை பூந்துகில் வடிமணி, யேந் திலைசுமந்து சாந்தம் விரைஇ, விடையரை யசைத்த வேலன் கடி மரம் பரவினர் உரையொடு பண்ணிய இசையினர், கோலெரி கொளைநறை புகைகொடி யொருங்கெழ—மாலைமாலை யடியுறை இயைநர்.' எழ எனவும் சுமந்து எனவும் நின்ற வினை எச்சங் களும், பரவினர் இசையினர் என்னும் முற்றுவினை யெச்சங் களும் இயைநர் என்னும் தொழிற்பெயருள் இயைதலோடு முடிந்தன.

(ஷை-19) 'உரிமாண் புனைகலம் ஒண்டுகில் தாங்கிப்—புரி மாண் புரவியர் போக்கமை தேரர்—தெரிமலர்த்தாரர் தெரு விருள் சீப்ப.' சீப்ப என்னும் எச்சத்திற்கு முடிபாகியபோந்து என்னும் சொல் வருவிக்கப்பட்டது.

(ஷை-11) பரந்து தெவி என்னும் செய்தெனெச்சங்கள் கவர்புற என்னும் வினைமுதல் வினைகொள்ள அச்செயலெனெச் சம் வழக்கிற்று என்னும் பிறவினைகொண்டது.

(ஷை-15) 'மகமுயங்குமந்தி வரைவரை பாய—முகிழ் மயங்கு முல்லை முறை நிகழ்வு காட்ட....சிலம்பிற் சிலம்பிசை ஓவாது.' மந்திபாய முல்லைகாட்ட என நின்ற செயவெனெச் சங்கள் இசை ஓவாது என்னும் பிறவினைகொண்டன.

(ஷை-22) 'தாரணிமைந்தர் தவப்பயன் சான்மென........ ஏரணி யிலங்கெயிற் றின்னகையவர்.' சான்மென என்னும் வினையெச்சம் இனிய நகையினையும் உடையவென இரண்டாவத னோடு விரிந்த பெயரெச்ச வினைகொண்டது. இது 'வினையெஞ்சு கிளவிக்கு வினையும் குறிப்பும்' என்பதனுல் வினைக் குறிப்போடு முடிதல் பெற்றது. சேந்தமிழ்ப் பத்திராசிரியர் இம்முடிபு அறியாது வேறு கூறினர். அது ஆறுவது பிழையாக முன் னமே மறுக்கப்பட்டது.

(குறள்-210) 'அருங்கேடன் என்பதறிக மருங்கோடித் தீவினை செய்யானெனின்' ஓடியென்னும் வினையெச்சம்செய்யான் என்னும் எதிர்மறை வினையுள் செய்தலோடு முடிந்தது.

(ஷை-548) 'எண்பதத் தான்ஓரா முறைசெய்யா மன்னவன்' எண்பதத்தான் என்னும் முற்று வினையெச்சமும் ஓரா என்னும் வினையெச்சமும் செய்யா என்னும் பெயரெச்சமறையுள் செய்தல் வினை கொண்டன.

சில்பதிகார வரும்பதவுரை

(காதை-28) நிறுத்தித் தழீஇ என்னும் எச்சங்கள் அகவன் மகளிர் என்னும் பெயரில் அகவுதற்றொழிலோடு முடிந்தன.

(ஷை-ஷை) உறீஇ ஏத்த என்னும் எச்சங்கள் அரும்பிய என்னும் பெயரெச்சத் தொழிலோடு முடிந்தன.

(ஷை-ஷை) ஆரிய மன்னர் தொகுதியொற்றுமை பற்றிக் காட்டி வணங்கி கொண்டோர் எனச் சிலர்வினை வேறுநில்லா வினையொடு முடிந்தது.

(ஷை-ஷை) ஏந்தியெனும் வினையெச்சம் எனும் என்னும் பெயரெச்ச வினையோடு முடிந்தது.

(புறம்-14) புலவு நாற்றத்தபைந்தடி—பூநாற்றத்த புகை கொளீஇ யூன்றுவை கறிசோறுண்டு வருந்து தொழிலல்லது பிறிது தொழிலறியாவாகலின் நன்று மெல்லிய கொளீஇ யென்னும் எச்சப் அமைத்தவென ஒருசொல் வருவித்து கொளுத்தி அமைத்த என முடிக்கப்பட்டது.

(ஷை-15) 'நெடுந்தேர் கூழித்த ஞெள்ளலாங்கண்—வெள் வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டி' பூட்டி யென்னும் எச்சத்திற்கு உழுது என்னும் சொல் தந்துரைக்கப்பட்டது.

(ஷை-22) 'பொலங் தோட்டுப் பைந்தும்பை—மிசையலங் குலைய பனைப்போழ் செரீஇ' செரீஇ யென்னும் எச்சத்தினை ஆடும் என ஒரு சொல் வருவித்து முடிக்க.

இத்துடன் மதுரைச் செந்தமிழ்ப் பத்திராதிபர் வினையெச்ச முடிபு என்ற பொருள்பற்றி யெழுதிய கட்டுரையின் மறுப்பு மன்னார்குடி இயற்றமிழாசிரியர் நாராயணசாமிப் புலவர் மகனார் சோமசுந்தரனார் வரைந்தது முற்றும்.

## இம்மறுப்புரையில் விளக்கப்பட்ட இலக்கண வகைகள்.

1. கருமகருத்தா விலக்கண விளக்கம்

2. 'செயப்படு பொருளைச் செய்ததுபோல' என்னும் சூத்திரத்திற்குச் சங்கர நமச்சிவாயர் உரைத்த உரையும் காட்டிய உதாரணங்களும் போலியென்பது

3. அச்சங்கர நமச்சிவாயர் உரையைத் தழுவி ஆறுமுக நாவலர் முதலியோரால் எழுதப்பட்ட காண்டிகையுரையும் போலியுரை எ—று.

4. வினையாலணையும் பெயரின் இலக்கணம் அவர்கள் நன்குணராமை

5. இம்மாடு யான் கொண்டது என்ற தொடர்மொழியில் எழுவாய் பயனிலையின் முடிபும் அவர் நன்கு உணராமை

6. வினையாலணையும்பெயர் (வினைப்பெயர்) வகை

7. கருத்தாவின்மேல் (வினைமுதன்மேல்) நின்ற வினைப்பெயர்

8. செயப்படுபொருண்மேல் நின்ற வினைப்பெயர்

9. கருவியின்மேனின்ற வினைப்பெயர்

10. வினைமேனின்ற வினைப்பெயர்

11. இடத்தின்மேனின்ற வினைப்பெயர்

12. காலத்தின்மேனின்ற வினைப்பெயர்

13. இம்மாடு யான் கொண்டது என்னும் தொடரில் எழுவாய் பயனிலை முடிபு

14. 'பொருண்மை சுட்டல்' என்னும் சூத்திரக் கருத்து

15. அச்சூத்திரத்தில் 'வினைநிலையுரைத்தல்' என்பதனால் 'சாத்தன் உண்டான்' என்றவழி சாத்தன் என்னும் எழுவாய்க்கு முடிபு உண்டான் என்பதன் முதனிலையாகிய உண் என்பதும், 'சாத்தன் பெரியன்' என்ற வழிப் 'பண்புகொள வருதல்' என்பதனால் பெரியன் என்புழிப் பெருமையாகிய பண்பு முடிபு என்பதும்

16. 'இம்மாடு யான் கொண்டது' என்புழி எழுவாய் இம்மாடு என்பதும் அதற்குப் பெயர்ப் பயனிலை 'யான் கொண்டது' என்பதும் கொள்ளுதல் யான் என்பதன் வினையாதலால் யான் என்பதற்கு முடிபு கொண்டது என்றல் ஆகாது, முதனிலையாகிய கொள்ளுதலோடு முடியும் என்பதும்

17. 'வினையெஞ்சு கிளவிக்கு வினையும் குறிப்பும் நினையத் தோன்றிய முடிபா கும்மே' என்றதனால் வினையெச்சம் வினைமுதனிலையைக் கொண்டும் வினைக்குறிப்பின் முதனிலையைக்கொண்டும் முடியும்என்பதும் ஆசிரியர் தொல்காப்பியனார்க்குக் கருத்து எ-து

18. கருவி கருத்தாவிற்குச் சேனாவரையர் முதலியோர் காட்டிய 'இல்லம் மெழுகிற்று; இல்வாழ்வன் என்பான்' என்றாற் போல்வனவே உதாரணமாகும் எ-து

19. வினைச்சொல்லின் வகை வினைமுற்று, வினையெச்சம் பெயரெச்சம் என்னும் மூன்றுமே—வினைப்பெயர் (தொழிற் பெயரும் வினையாலணையும் பெயரும்) பெயர்ச் சொல்லின் வகையே எ-து

20. 'மூவுருவாகிய தலைபிரியொருவனை' என்புழி ஒருவனை என்ற ஐ விகுதி முன்னிலையை விளக்கலின் முன்னிலையொருமை வினைக்குறிப்பு முற்றே எ—து

21. அடுக்குமொழித் தொடர்

22. ஒரு சொல்லடுக்கு

23. ஒருபொருண்மேல் பல பெயர் வரும் அடுக்கு

24. உருபடுக்கு

25. ஆறுவது ஒழிந்த உருபுகளில் ஒன்று பலபொருள் வழியவாய் வரும் அடுக்கு

26. ஆறுவது ஒழிந்த உருபுகளில் ஒன்று ஒரு பொருண் மேல் வரும் பல பெயர் வழி அடுக்கு

27. 'யானையது கோட்டை நுனிக்கட்பொருட்டு வாளால் குறைத்தான் எனப் பல வுருபுகள் விரவி வருதல் அடுக்கன்று எ—து

28. உருபு விரவி அடுக்கும் என்ற இளம். நச்சி. சங்கர. முதலியோர் உரை பொருந்தாமை

29. முற்று வினையடுக்கு

30. வினையெச்ச வினைச்சொல்லடுக்கு

31. பெயரெச்ச வினைச்சொல் லடுக்கு

32. 'குயிலைச் சிலம்பகிக் கொம்பினை' என்பது நன்னூலில் 'உருபுபல வடுக்கினும்' என்பதனுல் முடியும் எ-து.

33. அதனை ஒரு பொருண்மேல் பலபெயர்வரின் இறுதி ஒரு வினைகொடுப்ப என்பதனுல் சங்கர நமச்சிவாயர் முடித்துக் காட்டியது பொருந்ாது எ-து.

34. 'கட்கினியாள் காதலன் காதல்வகை புனைவாள்' இதனை உருபடுக்கென்று மயிலைநாதர் குறித்தது—பொருந்தாது எ-து.

35. இதனை முற்றெச்சவடுக்கு என்ற இலக்கண விளக்க நூலார் உரையும் பொருந்தாது எ-து.

36. வினைச்சொல்லின் முதனிலையே வினையெச்சப்பொருள் படுதலும் பெயரெச்சப்பொருள்படுதலும் முற்றுவினைப்பொருள் படுதலும் உண்டென்ற (இலக்கணக்கோத்து நன்னூல்) உரை பொருந்தாது எ-து.

37. உண்டு நடவான் என்றவழி உண்டு என்னும் வினை யெச்சத்திற்கு முடிபு நடவான் என்னும் எதிர்மறை வினைச் சொல்லுள் முதனிலையாகிய நட. என்பது என்று இலக்கணக் கொத்து நூலார் கூறியதே இலக்கணம் என்பதும், அவ்வாறு முடித்தல் உரையாசிரியர்க்கும் பரிமேலழகர்க்கும் நியமம் என்ற அவர் கூற்றிலே உரையாசிரியர் என்றது பேராசிரியரையே. செந்தமிழ்ப் பத்திராசிரியர் கொண்டவாறு இளம்பூரணரையே யன்று என்பதும்.

38. இல்லை—இல.' என்னுற்போல்வன எதிர்மறை வினைச் சொல் என்று செந்தமிழ்ப் பத்திராசிரியர் கூறியது போலியுரை யென்பதும், அவை இன்மை யென்பதன் அடியாகப் பிறந்த குறிப்பு வினைச் சொற்களாம் என்பதும் அல்ல அன்று முதலி யன அவ்வாறே அன்மை யென்பதன் அடியாகப்பிறந்த குறிப்பு வினைச் சொற்களாம் என்பதும்.

39. அவை யெதிர்மறை வினைச் சொல்லென்று இளம் பூரணர் நச்சினார்க்கினியர் சங்கர நமச்சிவாயர் முதலியோர் கூறி யனவெல்லாம் போலியுரை எ—து.

40. வினையின் புடைபெயர்ச்சி யிலக்கணம் இன்னதென் பது.

## இனி முடிவுரை.

இத்துணையும் விரித்துரைத்தவாற்றல் செந்தமிழ்ப் பத்தி ராசிரியர் திருநாராயணய்யங்கார் வினையெச்ச முடிபுபற்றி உரைத்தனவெல்லாம் போலியுரையென்பதும், அவர் பேருரை யாசிரியராகிய இலக்கணக்கோத்து நூலார் சிவஞானமுனிவர் இவர்கள் கூற்றையும் மறுக்கத் துணிந்தது, அறியாமையின் மேல் உய்தியில் குற்றமாகும் என்பதும் உணர்த்தப்பட்டது. இன்னும் இச்செந்தமிழ்ப் பத்திராசிரியர் கட்டுரையில் குற்றம்

காணப்புகின் விளையாட்டு மகளிர் அட்டமணற்சோற்றில் கல்லாராயப் புகுந்தால் ஒக்கும் ஆகலின் இஃது இத்துடன் அமைக. கல்வியறிவான் உயர்ந்த சான்றோர் அவரது கட்டுரையும் இம் மறுப்புரையும் நடுவு நிலைமையொடும் நோக்கி அவற்றுள் நல்லதும் பொல்லாததும் இன்னதென்று வெளியிடல்வேண்டும்.

(உரிமையுரை) **கவி.**

பண்ணார் மொழியாள் பாகன்சீர்
பரவும் வேளாண் குலதிலகன்
பாரோர் பசிக்கப் பாராதான்
பரந்த தமிழின்கொடி படரும்
விண்ணா றெயில்சூழ் தஞ்சைகிழான்
மெய்யன் **நீலமேகன்** சேய்
விரிந்த கலைகள் பலவுணர்ந்த
விரகன் வேட்பமொழி வல்லான்
கண்ணார் கரந்தைக் கழகத்தின்
**காவலன்** கரம்போல் நல்லமைச்சன்
**கந்தசாமி** யெனும் பெயரான்
சேனாவரையம் கரை கண்டான்
எண்ணா எந்தம்இடர் களைந்தான்
இமையார் மருந்தே எய்திடினும்
எமக்கீத் துண்பான் அவற்குரித்தாம்
யானய்ந் தெழுதுமிவ் வுரையே.

தமிழின் கொடி—தமிழாகிய கொடி, தமிழ்க் கலையின் வெற்றியைக் குறிக்கும் கொடியெனினும் ஒக்கும்.

விண்ணாறு—தஞ்சையைச் சூழ்ந்தோடும் ஆறு, வானாறு எனினும் அமையும்.

கழகத்தின் காவலன்—சபா நாயகன்—உமாமகேச்சுரன். கரம்போல் என்றது. 'உடுக்கை யிழந்தவன் கைபோல' என்ற தன் கருத்தை உட்கொண்டு நின்றது.

---